



1976
டிசம்பர் 5
நள ௵
கார்த்திகை 20


# போடுங்கள் புதிர்!







(விடை 63ம் பக்கம்)


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே - சம்பவங்களும் கற்பனையே.

---



# கதிரவன் கோயிலும் சாட்சி கோபாலனும்

"இப்பொழுது நாம் ஸாக்ஷி கோபாலனைத் தரிசிக்கப் போகிறோம்!" என்று எங்கள் பேருந்தின் வழிகாட்டி ஒலி முழக்கினார். புரியி லிருந்து கிளம்பிப் பல மைல்கள் வந்துவிட் டிருந்தோம்.

இங்கு கோயில் கொண்டிருக்கும் கடவுளின் பெயராலேயே இவ்வூரின் பெயரும் வழங்கி வருகிறது.

ஆம், இந்தக் கோபாலன் சாட்சி சொல்லப் புரிக்கு வந்தான்! 'யாருக்குச் சாட்சி சொல்ல? எங்கிருந்து ?' என்றெல்லாம் கேட்கத் தோன்றுகிறதல்லவா ?

இந்திய ஒருமைப்பாட்டுக்கு அடிகோலும் இவனை, வேறு யார் எப்படிச் சொன்னாலும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜயேந்திர ஸ்வாமிகள், காஞ்சிபுரத்தானாகத் தான் சொல்லுகிறார்கள்.

பக்தியால் பிணைக்கும் பாரத தரிசனத் துக்குப் புரியைச் சேர்ந்த பக்தர் வருகிறார். காஞ்சியை அடைந்த பொழுது நோய்வாய்ப் படுகிறார். காஞ்சி இளைஞன் ஒருவன் அவ ருக்குப் பணிவிடை செய்து குணப்படுத்தி உள்ளம் குளிர்விக்கிறான். மகிழ்ந்து போய் அவர் அவனுக்குத் தம் மகளைத் திருமணம் செய்து தருவதாக வாக்களிக்கிறார். எங்கே? பெருமாள் சந்நிதியில்! அநாதையான இவ்விளைஞன், தானே ஒருத்திக்கு நாதனாகப் போகும் மகிழ் வுடன் அவரோடு புரிக்கு வந்து சேருகிறான்.

ஆனால் புரிக்கு வந்தபின், அவ னுக்குப் பெரிய ஏமாற்றம்! அந்தப் பக்தரின் மனைவியோ சுற்றத்தாரோ அநாதைச் சிறுவனுக்குக் கிளி போன்ற பெண்ணைக் கொடுக்கத் தயாராயில்லை. பாவம், பக்தர்! பெண்டாட்டி தாசராகி விடுகிறார்!

எத்தனையோ காதம் வந்து காதற்கிழத்தி கிடைக்காமற் போகவே இளைஞன் புரி மன்னரிடம் பிராது தொடுக்கிறான்.

"இதற்குச் சாட்சி உண்டா ?"

"கடவுள்தான் சாட்சி !"

"அவரையே கூட்டிவா !" அரச கட்டளைக்குப் பணிந்து, இளைஞன் காஞ்சிக்கு வருகிறான்; கோயில் கொண்டிருக் கும் வரதராஜப்பெருமாளை வேண்டுகிறான்.

அவனது ஆறாப் பிரேமைக்கு மனம் இரங்கி, "நீ எனக்கு முன்னால் வழி காட்டியவாறே போய்க் கொண்டிருக்க வேண்டும். நான் உன்னைத் தொடர்ந்து வருவேன் !" என் கிறார் பெருமாள்.

"அதை நான் எப்படி நம்புவது ?" நம்பி நம்பிக்கை இழந்து கேட்கிறான்.

"நான் கால் சதங்கை ஒலிக்க நடந்து வரு வேன். நீ திரும்பிப் பார்த்தால் நின்றுவிடு வேன் !" பெருமாள் இப்படி ஒரு நிபந்தனை விதிக்கிறார்.

புரிக்குச் சில காத தூரம் இருக்கும்போது அலகி..ா விளையாட்டுடையோனுக்கு ஒரு வேடிக்கை தோன்றுகிறது. சதங்கை ஒலி கேளாமல் நடக்கிறான். 'இந்த பகவானும் மனிதர்களைப் போல் ஏமாற்றிவிட்டானோ ?' என்று எண்ணி இளைஞன் திரும்பிப் பார்த்து விடுகிறான்.

குறுநகை புரிந்தவண்ணம் பரமன் நின்று விடுகிறான். என்னதான் மன்னனானாலும், முயற்சி இன்றிக் கடவுளைத் தரிசித்துவிட முடி யுமா ? இளைஞனின் கூற்றில் உள்ள உண்மை

→

- அன்றைய கோனார்க்கின் வரைபடம்
- இன்றைய கோனார்க்கின் எழில் தோற்றம்
- காலத் தேரின் கல் மீது சக்கரம்
- கம்பீரத்துக்கு ஒரு யானை
- நளினத்துக்கு ஒரு நங்கை





யைக் கண்டறிய மன்னன் அவ்விடத்துக்கே வருகிறான். ஆண்டவனைத் தரிசித்து மகிழ்கிறான்.

''இளைஞனின் கல்யாணம் ?''

கோபாலனே சாட்சியாக வந்தபின், 'ஜாம் ஜாம்' என்று நடக்கக் கேட்பானேன் ?

சாட்சி கோபாலனும் மதன கோபாலனும் தேடிக் குடிகொண்டிருக்கும் இந்தக் கோயிலைச் சுற்றி வரும் பொழுது நம்மைப் பண்டாக்களும் சுற்றி வருவார்கள். எதற்கா? அவன் சாட்சியாகத் தங்கள் வயிற்றுப்பாட்டைப் பார்த்துக் கொள்வதற்கு!

இந்த 'சாட்சி கோபால்' என்னும் சிற்றூரை உத்கலத்தின் தேச பக்தர்களுள் சிறப்பு மிக்கவரான கோப பந்து தாஸ், ஒரு வரலாற்றுச் சிறப்பு மண்டபம் அமைக்கவும் ஒரு தோட்டப் பள்ளி தொடங்கவும் தேர்ந்தெடுத்தார். 1877–1928க்கு இடையே வாழ்ந்த அவர் சிறந்த காந்தியவாதி. 'சத்தியவாதி' என்னும் மாதப் பத்திரிகையும், 'சமாஜ்' என்னும் வாரப் பத்திரிகையும் நடத்தி நாட்டுப் பற்றுக்கு வித்திட்டவர். தம் கவிதை, கட்டுரைகளால் ஒரியா இலக்கியத்துக்கு வளங்கூட்டியவர். அவர் அடிச்சுவட்டில், அவர் பணி சிறக்க எத்தனையோ உயர் மட்டத்து அரசு ஊழியர்கள் வேலையை உதறிவிட்டுத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார்கள். என்றாலும், கோபபந்துவின் பணி விசுவபாரதியாக — சாந்தி நிகேதனமாகப் பரிணமிக்கவில்லை. இதற்குச் சாட்சி சாக்ஷி கோபாலே.

ஸ்ரீ கோப பந்து கவிதைகளிலே 'தர்மபத'மும் 'ஒரு கைதியின் சுயசிந்தனை'யும் நினைவு கூறத் தக்கவை. இவை நினைவு வரும்பொழுது 'கோணார்க்' நினைவு வராமற் போகாது. ஏனெனில், தர்மபதம் கோணார்க் பற்றிய சிறந்ததொரு காவியம்.

இதோ கோணார்க்குக்குப் போகும் வழியிலே 'ஜே, ஜே' என்று கடையும் கடைத் தெருவுமாக இருக்கிறதே, இதுதான் பிப்லி ! கண்ணைப் பறிக்கும் தேர்ச் சீலைகளுக்கும், எழில்மிகு கூடாரக் கூரைத் துணிகளுக்கும், கோயில் குடைகளுக்கும் பெயர் போன இடம். வேலைப்பாடு மிகுந்த கலைச் செல்வத் துணிகள் இங்கே கிடைக்கின்றன.

கோணார்க்கை அடைந்தவன், ''இங்கு பார்க்க வேண்டியவை என்ன, என்ன?'' என்று கேட்டேன்.

''இந்தக் குக்கிராமத்தில் கதிரவன் கோயிலைத் தவிரப் பார்க்க வேறு என்ன இருக்கிறது?'' என்று கேட்ட நண்பர் கூறினார் :

''கலை உள்ளம் படைத்தவர்கள் கோயிலைப் பார்க்கப் போய்விட்டால், இலேசில் மீண்டு வரமாட்டார்கள். அதன் எழிலில் ஆழ்ந்து சொக்கிப் போய்விடுவார்கள் !''

நாற்புறமும் பொட்டைத் திடல் என்றாலும், மனிதனது கற்பனை வளத்துக்குச் சான்றாக நிற்கிறது கதிரவன் கோயில். இப்போதைய இடிபாடுகளைக் கற்பனைக் கண் மூடி மறைத்துவிடுமானால், கண்கொள்ளாக் காட்சிதான்.

சந்திரபாகா நதிக் கரையில் உள்ள இந்த க்ஷேத்திரம் சூரிய வழிபாட்டுக்குரிய தலமாக விளங்கியது என்பதற்குப் புராண ரீதியான வரலாறு ஒன்று உண்டு.

ஸ்ரீ கிருஷ்ணனின் குமாரன் சாம்பன் துர்வாச முனிவரின் சாபத்துக்குள்ளாகித் தொழு நோயால் பீடிக்கப்பட்டான்; சூரியனை வழிபட்டுச் சாப விமோசனம் பெற இத்தலத்துக்கு அனுப்பப்பட்டான். பன்னிரண்டு ஆண்டுகள் கடும் தவம் இயற்றிக் குண நலம் பெற்றான்.

இன்று சந்திரபாகா நதி மணல் மேடிட்டுப் போய்விட்டது. கடற்கரைக் கோயிலாகச் சிறப்புப் பெற்ற இக்கோயிலிலிருந்து கடலும் பல காத தூரம் விலகிப் போய்விட்டது.

பதின்மூன்றாம் நூற்றாண்டின் மத்தியிலே, நரசிம்ம தேவன் என்னும் மன்னனால், கடற்கரையில் கட்டப்பட்ட இக்கோயில் ஒரு கோணத்திலிருந்து எடுப்புடன் காட்சி தருவதாகக் கட்டப்பட்டதனால் 'கோணார்க்' என்ற பெயரைப் பெற்று ஊருக்கே அப்பெயரை வழங்கிவிட்டது.

கடலைத் தூர்த்து இக்கோயில் எழுப்பப்பட்டதாக ஒரு கதையுமே வழங்குகிறது. ஷிபேயி ஸாந்த்ரா என்னும் சிற்பி பெரும் பெரும் பாறைகளாக எடுத்து நடுக் கடலில் போட்டுக் கடலைத் தூர்க்க முயன்றானாம்.





கடல் அலைகள் கற்களைப் புரட்டிப் புரட்டி ஆழத்துக்கு இழுத்துச் சென்றுவிட்டனவாம். எனவே, நம்பிக்கை இழந்த சிற்பி கால் போன போக்கில் சுற்றப் போயிருக்கிறான். வழியில் பசி எடுக்கவே, ஒரு கிழவியின் விருந்தாளியாகியிருக்கிறான். அவளும் அன்போடு பாயசம் வைத்துச் சுடச் சுட வார்த்திருக்கிறாள். பசி மிகுதியில் அவன் நடுப் பகுதியிலிருந்து பாயசத்தை எடுத்துச் சாப்பிட முயன்றிருக்கிறான். கையும் வாயும் சுடவே, கையை உதறி நாக்கைத் தொங்க விட்டுக் கொண்டு அவதிப்பட்டிருக்கிறான்.

''நீயும் என்ன ஷிபெயி ஸாத்த்ராவா? ஓரமாக எடுத்துச் சாப்பிடாமல் நடுவில் கையை வைத்துச் சுட்டுக்கொண்டு அமர்க்களப்படுத்துகிறாயே!'' என்று கிழவி கேட்டிருக்கிறாள். நல்லவனுக்கு ஒரு சொல் போதாதா? கடலைத் தூர்த்து அஸ்திவாரம் போடத் தான் மேற்கொண்ட முறையிலுள்ள தவறைப் புரிந்துகொண்டவன் கரையிலிருந்து கடலைத் தூர்த்து வெற்றியும் கண்டிருக்கிறான்.

இரவும் பகலும் மாறி மாறி வருவதையும், இந்த இயக்கத்தில் கதிரவன் பங்கு கொண்டு கீழ்க் கடலில் உதித்து மேலைக் கடலில் மூழ்குவதையும் கண்ட கலைஞனின் கற்பனை உள்ளம் சூரியனின் கோயிலாகச் சமைத்தது ஒரு தேர்க் கோயிலை.

ஏழு குதிரைகள் பூட்டி அருணன் ஓட்டி வரும் கதிரவனின் காலத் தேருக்கு இருபத்து நான்கு சக்கரங்கள்; ஒவ்வொரு சக்கரத்துக்கும் எட்டு ஆரங்கள்! எல்லாம் கணக்கு; காலக் கணக்கு! ஏழு நாட்கள் தான் ஏழு குதிரைகள். இருபத்து நான்கு சக்கரங்களும் இருபத்து நான்கு பட்சங்கள். ஒவ்வொரு சக்கரத்திலும் உள்ள எட்டு ஆரங்கள் எட்டு ஜாமங்கள்! எல்லாவற்றுக்கும் மேலாக அருவத்துக்கு உருவம் கொடுத்த கற்பனைச் செழிப்பிலும்தான் என்ன கணக்கு, என்ன கணக்கு!

இந்தக் கோயிலின் எழிற் சிற்பங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம், அறத் துறை, சமூகத் துறை, அகத் துறை என்று! அறத் துறையில் தெய்வச் சிற்பங்களும், புராணக் கதைகளைச் சார்ந்த சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன. சமூகத் துறையில் வண்டி இழுக்கும் மாடுகளும் சமைக்கும் பெண்களும், போர் முனையிலிருந்து திரும்பும் வீரர்களும் உயிர்ச் சிற்பங்களாக வடிக்கப்பட்டிருக்கின்றனர். அகத் துறையிலோ மெய் சிலிர்க்க வைக்கும் சிங்கார ரசக் காட்சிகள்; இன்பமூட்டும் இனக் கலவைகள்! யதார்த்தம் வழங்கும் ஆதரிசங்கள்! இக்கோயிலுக்கு அணி செய்யும் குதிரையையும் யானையையும் இன்றும் பார்த்துக் கொண்டே இருக்கலாம். ஒரு கல்லில் செதுக்கிய நவக்கிரகங்கள் இரண்டாகத் துண்டாடப்பட்டிருந்தாலும் அழியாக் கலைச் செல்வங்கள்!

இந்தக் கலைக் களஞ்சியத்தில் இன்பம் துய்க்கத் தொடங்கி விட்டால், நண்பர் கூறியதுபோல் மீண்டு வரத் தோன்றாதுதான்!

இந்தத் தேர்க் கோயிலை உருவாக்க ஆயிரத்து இருநூறு சிற்பிகள் அல்லும் பகலும் தங்கள் கரங்களுக்கு ஓய்வு கொடுக்காமல் பன்னிரண்டு ஆண்டுகள் வேலை செய்திருக்கிறார்கள், சாம்பன் தவமியற்றியது போல!

ஆனால் பார்த்துப் பார்த்துப் பணி செய்த அத்தனை பேரும் ஒரு நாள் கன்னத்தில் கை வைத்துக் கொண்டு சோகமே உருவாக உட்கார்ந்திருக்கிறார்கள்! எத்தனையோ முயன்றும் கருவறை விமானத்தின் பத்ம கலசத்தை உச்சியில் சரிவரப் பொருத்த முடியாமல் திண்டாடியிருக்கிறார்கள்! 'மூன்று நாட்களுக்குள் அவ்வேலையை முடிக்காவிட்டால் ஆயிரத்து இருநூறு பேருக்கும் சிரசாக்கினை!' என்று மன்னன் சொல்லிப் போய்விட்டான்.

கோயிலையே கணக்குக் கோயிலாக உருவாக்கிய அவர்களுடைய கணக்கு எங்கேயோ தவறி விட்டது; தலையைப் பிய்த்துக் கொள்ளச் செய்து விட்டது.

பிரதான சிற்பி விசு மகாராணாவோ பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் ஊரைவிட்டு வந்தவன், மனைவியைக் கைக் குழந்தைக்காரியாக விட்டு விட்டு! தலை தப்பாது என்று தோன்றவே, குடும்ப நினைவு தலை தூக்கித் தவித்தான்; தன்னை மறந்து திரிந்தான்.

இந்த நேரத்தில்தான் ஓர் இளைஞன் அக் கோயிலுக்கு வந்தான். சிற்பிகளின் துயரக் கதையைக் கேட்டவனுக்குத் தூக்கம் கொள்ளவில்லை. தன் மூளையைப் புரட்டி எடுத்தவனுக்குக் கலசத்தின் தாமரையைப் புரட்டிப் போட்டால் கணக்காகப் பொருத்த முடியும் என்று விளங்கிவிட்டது!

இரவோடு இரவாக அந்தப் பணியை முடித்தவன் ஆத்ம திருப்தியுற்றான். ஆனால் அதே நேரத்தில் அவனை வேறு ஒரு கவலை பிடித்துக் கொண்டது. 'இந்தச் சிறு பிள்ளைக்குத் தெரிந்தது உங்களுக்குத் தெரியவில்லையே' என்று கூறி மன்னர் அத்தனை பேருக்கும் சிரசாக்கினை விதிக்கமாட்டார் என்பது என்ன நிச்சயம்? பல உயிர்களைக் காப்பாற்ற வேண்டித் தன்னுயிரைத் தியாகம் செய்யத் தீர்மானித்து அந்தச் சிகரத்திலிருந்தே கடலில் குதித்துவிட்டான்!

அப்படிக் குதித்தவன், 'அப்பனுக்குத் தப்பாமற் பிறந்த பிள்ளை தர்மபதன்தான்' என்று விசு மகாராணாவுக்குத் தெரிந்தபோது?.. கடலில் குதித்த பிள்ளையைத் தேடி வரத் தானும் குதித்து விட்டான்!

இம்மாதிரி பாபத்துக்குத் தான் இனி இடமாகக் கூடாது என்று எண்ணித்தானோ, என்னவோ; கடலரசன் வெகு பின்னுக்குப் போய்விட்டான்.

சோகத்தின் சிகரமென இப்படி ஒரு கதையைத் தன்னுள் அடக்கியிருந்தாலும், கலையின் சிகரமாகத் திகழும் இக்கோயில், காந்தக் கல் ஒன்றைத் தன் உச்சியில் கொண்டிருந்ததாம். அது கடலில் போகும் கப்பல்களையெல்லாம் தன் பக்கம் இழுத்ததாம். அந்தக் காந்தக் கல் வேற்று நாட்டவரின் கண்களை உறுத்தியிருக்கிறது. அதனால் அதைக் கவர்ந்து சென்றுவிட்டார்கள்.

அதனால்தான் கோயில் பின்னமடைந்து விட்டது என்று கூறுகிறார்கள். ஆனால் காலதேவனின் சிரிப்பு அதற்கு மறுப்பாக ஒலிக்கிறது. 'என்னை மறந்துவிட்டாயா?' என்கிறாற் போல! ஆனால் காலனுக்கே வழி காட்டும் கதிரவனின் கலைத் தேர் என்றென்றும் நிலைத்து நிற்க வேண்டும் என்று எந்தக் கலை உள்ளமும் வேண்டத்தான் செய்யும்.

# எங்கள் பணியே தனித்தன்மை வாய்ந்தது

அதனை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

டிவிஎஸ் பணிமனையில் எங்களுடைய பராமரிப்பும் சேவையும் தனிப்பட்ட கவனத்துடன் அளிக்கப்படுகின்றன. உதாரணமாக, உங்களது க்ராங் ஷாஃப்ட்டை அசல் க்ராங் ஷாஃப்ட்டுக்கு இணையாக மிகத் துல்லியமாகவும், நேர்த்தியாகவும் கிரைண்ட் செய்கிறோம்.

உண்மையாகச் சொன்னால், தயாரிப்பாளர்களின் தரநிர்ணயத்திற்கேற்ப எங்கள் வேலையின் தன்மை அமைந்துள்ளது.

டிவி எஸ்ஸில் எங்களால் இதனைச் சாதிக்க முடிவதன் காரணம்: 60 வருடங்களுக்கு மேற்பட்ட எங்களது நிறைந்த அனுபவம், நாங்கள் உபயோகிக்கும் திறன் மிக்க இயந்திரங்கள், மிகத் திறமையான, பயிற்சி பெற்ற ஊழியர்கள், மேலும் புகழ் பெற்ற தயாரிப்பாளர்களின் அசல் மோட்டார் உறுப்புகள் இவையே.

இவற்றிற்கெல்லாம் இணையாக, எங்களுடைய பணிமனையிலேயே உங்கள் வண்டிகளுக்குத் தேவைப்படும் பணிகள் அனைத்தையும் அளிக்கிறோம்.

மேலும் தென்னிந்தியா முழுவதும் பரவியுள்ள எங்கள் பணிமனைகளில் எங்கள் பணியின் தனித்தன்மையைக் காணலாம்.

**உங்கள்
நம்பிக்கைக்குரியது
டிவிஎஸ்**

டி வி சுந்தரம் அய்யங்கார் அண்ட் சன்ஸ் லிமிடெட்
மதுரை மற்றும் கிளைகள்.




SAA/TVS/2307

## ஒவ்வொரு நாளும் உங்கள் சருமம் சிறிது ஈரப்பசை - யையும், சிறிது இளமையையும் இழக்கின்றது.



## புதிய ஜான்ஸன்ஸ்* பேபி லோஷன் ஒவ்வொரு நாளும் ஏற்படுகின்ற அந்த இழப்பை ஈடுசெய்கின்றது.

ஒரு பெண்மணியின் விலையில்லாப் பொக்கிஷம் அவளது சருமம். எனினும், வயதாக ஆக, அதை அழகாகவே வைப்பது கடினமாகும். வருங்காலத்தில் உங்கள் சருமத்தை அழகாக வைக்கவேண்டுமானால், அதை இன்று முதலே நன்று பராமரிக்கவேண்டும். ஆகையால்தான் உங்களுக்குத் தேவை புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன். இந்த விசேஷ அழகு லோஷன் சருமத்திற்கு இன்றியமையாத ஈரப் பசையை நிலை நிறுத்துகிறது.

அதோடு, கடுமையான குளிர் மாதங்களில் உங்கள் சருமத்தை மிருதுவாகவும், இளமையுடனும், அழகொளி வீசும்படியும் வைக்கிறது— ஆண்டு முழுவதும் கூட. எனவே, ஒவ்வொரு காலையிலும் இரவிலும் புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன் உபயோகியுங்கள். உங்கள் முகம், கழுத்து மற்றும் கைகளில் உபயோகித்து, உங்கள் சருமத்திற்குப் பனிபோன்ற புதுமையை அளித்திடுங்கள்.




## புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன்

## உங்கள் சருமத்தை மிருதுவாக, இளமை தவழ, அழகொளி வீச வைக்கின்றது.

# ஆமோதிக்கிறோம்!

★ அரசியல் சாசனத்தின் தொடக்கத்தில் இடம் பெற்றுள்ள 'செக்யூலர்' என்ற வார்த்தை சர்வமத சம்மதத்தைக் குறிக்குமேயன்றி மதங்களைப் புறக்கணிப்பதாக ஆகாது என்று விளக்கம் கொடுத்த பிரதமர், 'ஸோஷலிஸம்' என்பதற்கும் பாரதத்தில் தனி அர்த்தம் உண்டு. அது பொது உடைமை வாதமல்ல என்று சொல்லியிருக்கிறார். ஜவாஹர் நகரில் கிடைத்த இந்த விளக்கத்தை வரவேற்று ஆமோதிக்கிறோம். ஆனால் அதே சமயத்தில் எதிர்காலத்தில் என்றோ ஒருநாள் ஆட்சிக்கு வரக்கூடிய வேறு தலைவர்கள் அல்லது கட்சியினர் இந்த வார்த்தைகளுக்கு அகராதி அர்த்தத்தையே கற்பித்து அதன்படி ஆட்சி நடத்த முற்பட்டால் என்ன செய்வது என்ற நியாயமான கவலையும் நமக்கு எழுகிறது.

★ 'காங்கிரஸுக்குள்ளும் சண்டை கூடாது, இன்னொரு காங்கிரஸுக்குள்ளும் சண்டை கூடாது, இரு காங்கிரஸ்களுக்கு இடையேயும் சண்டை உதவாது' என்ற பிரதமரின் கருத்தைச் சம்பந்தப்பட்டவர்களுக்கு மீண்டும் வலியுறுத்திச் சொல்கிறோம்.

★ பாரதத்தின் அயல்நாட்டுக் கொள்கை என்ன என்பதையும் கௌஹாத்தி காங்கிரஸில் சுருக்கமாக வெளியிட்டு இருக்கிறார் பிரதமர்: 'இருக்கிற நட்புறவுகளை மேலும் பலப்படுத்துவது; நட்புறவு இல்லாத நாடுகளுடன் நட்புறவை உருவாக்குவது; பகை உணர்வு கொண்ட நாடுகளுடன் அந்த விரோத உணர்ச்சிகளைக் குறைந்தபட்சமாக்குவது.' பிரதமரின் இந்தக் கருத்து பொன்னெழுத்தில் பொறிக்கப்பட வேண்டிய ஒன்று.

★ 'மாநில முதல்வர்கள் தங்களுக்கென்று தனி சாம்ராஜ்யம் கிடைத்து விட்டது போல் நடந்து கொள்ளக் கூடாது' என்ற பிரதமரின் பேச்சு சற்றுக் கடுமையாகத் தொனிக்கலாம். ஆனால் ஆழ்ந்த உட்பொருளை உடையது. மாநில முதல்வர்கள் மாநிலத்தின் நலனையே முதலில் எண்ணிப் பாரதத்தின் ஒட்டுமொத்தமான நலனைச் சிந்திக்கத் தவறி விடுகின்றனர். அதன் விளைவுதான் எல்லைச் சண்டைகள், நதி நீர்ப் பங்கீடு பிரச்னைகள் முதலியன. இந்தப் போக்கு மாற வேண்டும் என்று பிரதமர் எதிர்பார்ப்பதில் என்ன தவறு கண்டுபிடிக்க முடியும்?

★ எதிர்க் கட்சிகள், ஆட்சியைக் கவிழ்க்கப் பார்ப்பதையும் நாட்டின் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை போடுவதையும் விட்டொழித்துப் பொறுப்புள்ள முறையில் அரசின் தவறுகளை எடுத்துக் கூறி நற்பணியாற்ற வேண்டும் என்று பிரதமர் எதிர்பார்ப்பது நியாயமே. இன்றையச் சூழலில் பிரதமருடன் நிர்மாணப் பணிகளில் ஒத்துழைத்தும், அதே சமயம் அரசு செய்யும் தவறுகளைக் கண்டித்தும் பலம் பெறுவதே எதிர்த்தரப்பின் சாணக்கியமாக இருக்க முடியும். மாறாக எதிர்ப்பதொன்றே எமக்குத் தொழில் என்று இயங்குவது வெற்றிக்கு வழியல்ல, மக்களின் நன்மதிப்பையும் இதனால் பெற முடியாது. வறட்டுக் கௌரவம் பாராமல் பிரதமர் அளிக்கும் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளுமாறு எதிர்க் கட்சிகளைக் கோருகிறோம்.

★ 'அரசியலையே தொழிலாகக் கொண்டவர்கள் காங்கிரஸிலேயே இருக்கிறார்கள் என்பதை உணர்ந்தே பேசுகிறேன், இது தேசத்துக்கு நல்லதல்ல' என்று பிரதமர் கூறியிருக்கிறார். இக் கருத்து அட்சர லட்சம் பெறும். நல்ல உத்தியோகத்திலோ, தொழிலிலோ ஈடுபட்டு அதில் நன்றாகச் சம்பாதிக்கவும் செய்து, கூடவே அரசியலிலும் கவனம் செலுத்துவோர் தாம் தன்னலமற்றுப் பணியாற்ற முடியும்.

★ 'இந்தியா என்றுமே, ஒரு விவசாய நாடாகத்தான் இருக்கும்' என்று பிரதமர் கூறியுள்ளதைக் கரவொலி எழுப்பி வரவேற்கிறோம். மக்களின் சுபிட்சவாழ்வு மலர விவசாயத்துக்கே முக்யத்துவமும் முதலிடமும் தரப்படுவது மிகவும் அவசியம். விவசாயத்தைப் புறக்கணித்து

கல்கி மலர் 36 இதழ் 19



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - **பாரதியார்**

விட்டு வேறு எந்த அம்சத்தில் எவ்வளவு கவனம் செலுத்தினாலும் பயன் இராது.

★ வரிவிதிப்பிலும் தொழில் வர்த்தகத் துறைகளிலும் கொள்கை மாற்றங்கள் பல ஏற்பட்டதன் நல்ல விளைவுகளை ஏற்கெனவே தேசம் உணர்ந்து வருகிறது. ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகக் கொள்கைகளை எளிதாக்கத் திட்டமிட்டிருப்பதாகப் புது செய்தியும் கிடைத்திருக்கிறது. நல்ல முடிவு. பாராட்டுகிறோம்.

★ மரம் நடுதல், வரதட்சிணை ஒழிப்பு, குடும்பக் கட்டுப்பாடு, சுற்றுப்புறத் தூய்மை, கல்வி பரப்புதல் ஆகியவற்றுக்கு இளைய பாரதத்தினர் அனைவருமே தோள் கொடுத்து உதவக் கடமைப்பட்டிருக்கின்றனர். இவற்றை சஞ்சய் காந்தியின் திட்டம் என்றோ இளைஞர் காங்கிரஸின் திட்டம் என்றோ கருதி காங்கிரஸ் அல்லாதார் புறக்கணிக்கத் தேவையில்லை. தேசப் புனருத்தாரணத் திட்டமாகவும் பாரத மக்களின் நல்வாழ்வுத் திட்டமாகவுமே எண்ணிக்கை கொடுக்கலாம். ஏன் போட்டி போட்டுக் கொண்டு கூடச் செயலாற்றலாம்!

# சென்னையில் வெள்ளம்!

மூவாயிரம் பேரைப் பலி வாங்கிய துருக்கி பூகம்பம் உருவாக்கிய துயரைவிடப் பத்து பேரைக் காவு கொண்ட சென்னை நகர வெள்ளம் ஏற்படுத்திய துன்பம் அதிகமில்லை தான். ஆனாலும் நமக்கு நெருங்கியவர்களை எண்ணித்தானே கண்கலங்கி நிற்க முடியும்?

போதும் போதுமென்னுமளவில் பெய்தது மழை. வெள்ளம் பெருக்கெடுக்க, போதும் போதுமென்னுமளவில் வாட்டியது துயரம். ஆயிரக்கணக்கானவர் வீடு வாசலிழந்து நிற்கின்றனர். அரசு, போலீஸ், தீயணைப்புப் படை, என். ஸி. ஸி. ஆகியோர் துணையுடன் துயர் துடைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறது.

சொல்லி முடியாத துன்பம் அனுபவித்த ஏழை எளிய மக்களுக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்வோம். துயர் தீர்க்கும் நற்பணியில் இயன்ற அளவில் கைகொடுத்து உதவுவோம்!

# அமரர் ‘லங்காபதி’



ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே அண்ணல் காந்தியடிகளும், விநோபா அடிகளும் ‘லங்காபதி’ என்று செல்லப் பெயரிட்டு அழைத்த எம். சிவகுருநாதன் அண்மையில் அமரரானார். யாழ்ப்பாணத்தில் பிறந்த இவர் தமது இருபத்தோராவது வயதில் காந்திஜியின் சத்தியாக்ரக இயக்கத்தினால் கவரப்பட்டு இந்தியா வந்தார். பலமுறை விடுதலைப் போரில் சிறைவாசம் அனுபவித்தார். சபர்மதி ஆசிரமத்திலும் ராஜாஜியின் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்திலும், திருப்பூர் சர்வோதய சங்கத்திலும் பல ஆண்டுகள் பணிபுரிந்தவர். காந்தீயக் கருத்துக்கள், சர்வோதயக் கருத்துக்கள் கொண்ட புத்தகங்களுக்கும் மத்திய அரசு வெளியீடுகளுக்கும் சர்வதேச ஏஜண்டாக விளங்கி, இலங்கை, பர்மா, சிங்கப்பூர் முதலிய பல தேசங்களுக்கும் சென்று சர்வோதயம் பரப்பி வந்தார். அமரர் கல்கி இவரைப் பற்றித் தமக்கே உரிய ஹாஸ்ய நடையில் பல கட்டுரைகளில் எழுதியிருக்கிறார். இலங்கையில் ராமகிருஷ்ண மடம் ஸ்தாபிப்பதற்குப் பொருளாலும், உடலாலும் உதவி புரிந்தவர். அவரும் கடைசிவரை ஒரு துறவி போலவே ‘என் கடன் பணிசெய்து கிடப்பதே’ என்ற குறிக்கோளுடன் வாழ்ந்தார். மேற்குவங்கப் பஞ்சம் போன்ற காலங்களில் தொண்டு செய்தவர். நோய்வாய்ப்பட்டிருந்த போதிலும் சென்ற ஆறு மாதகாலமாக ஓடியாடித் தம் நண்பர்கள் பலரைச் சந்தித்து அன்பு பேசி, கலகலவெனச் சிரித்துக் கொண்டே இறை எய்தினார்.

மறைந்த அன்பரின் ஆன்மா சாந்தி பெறுவதாக.

---

ராஜாஜி சிந்தனை

## உத்தரன் கதை உணர்த்தும் கருத்து

அந்தப்புரப் பெண்களின் முன் சூரனைப்போல் பேசிச் சேனையைக் கண்டதும் பயந்து ஓடிய உத்தரனுடைய கதை பாரதத்தில் அமைந்திருப்பது ஹாஸ்யத்துக்காக மட்டுமல்ல.

குணங்களைப் படைத்தவர்கள் அத்தகைய குணங்கள் இல்லாதவர்களைப் பார்த்து வெறுப்பது மனித சுபாவம். வீரியம் படைத்தவர்கள் வீரியம் காட்ட முடியாமல் பயப்படும் ஜனங்களைப் பார்த்து இகழ்வது சகஜம். ஆனால் தனஞ்சயன் அவ்வாறு செய்யவில்லை. மகாத்மாவும் உண்மை வீரனுமான அவன், உத்தரனுடைய நிலையைக் கண்டு அவனுக்கு வேண்டியதைச் செய்து அவனையும் வீரனாக்கினான். தான் படைத்த தைரியத்துக்குத் தன் பிறவிக் குணமே காரணம் என்று அறிந்து அகம்பாவத்தை அகற்றிய அர்ச்சுனன், தைரியம் இழந்த உத்தரனுக்குச் செய்ய வேண்டியதைச் செய்து அவனுக்கும் புகழ் சம்பாதித்துக் கொடுத்தான். இதுவே தனஞ்சயனுடைய தனிச் சிறப்பு.

—வியாசர் விருந்து

உன் போக்கை மாற்றிக் கொண்டு பேச வா!

பேச்சைக் குறைத்துச் செயலைப் பெருக்கு!



எதிர்க் கட்சிகள்

துண்டு நீண்டுகிறது! ஜாக்கிரதை!

சி.எஸ்

தி.மு.க

முள்ளைக் கொண்டு முள்ளை எடு என்பாங்க.. எங்கிட்ட கூட சுத்தியலும் அரிவாளும் இருக்கு!.. ஒரு கை பார்த்து விடுகிறேன்....

கம்யூனிஸ்ட் கட்சி

# எனக்குத் தெரியுமே நம்பகமானது க்ளைகோடின்–

**இருமல் தொல்லை இவளை விரைவில் விட்டகல...**






## இந்தியாவின் வேறெந்த இருமல் மருந்தையும் விட அதிக அளவிலே இருமலை நிறுத்தியுள்ளது க்ளைகோடின்.

## எனவேதான் அது முதல்தரமானது

இருமல் பாதித்த எல்லா உறுப்புகளிலும் அது விரைந்து செயல்பட்டுத் தவறாமல் துரிதமான ஆறுதல் அளிக்கிறது.

- தொண்டைக் கமறலுக்கு இதமளிக்கிறது.
- ஜலதோஷத்தோடு வரும் இருமலை விலக்கிச் சளியடைப்பைத் தளர்த்துகிறது.
- நிம்மதியான உறக்கத்தைத் தூண்டி, மார்புத் தசைகளை இளைப்பாற்றி மூச்சு விடுதலை எளிதாக்குகிறது.

**எவ்வித இருமலையும் முழுதும் கட்டுப்படுத்த உறுதுணை க்ளைகோடின்.**




க்ளைகோடின்—இந்தியாவில், இருமலை முறியடிக்கும் சேம்பியன்—நம்பகமான மருந்துகளை நமக்குத் தரும் அலெம்பிக் நிறுவனத்திடமிருந்து.

everest/519/ACW-tm

# ஜீவகாருண்யம்




ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகள்

**வா**ழ்நாள் முழுக்க எதன் நினைப்பு ஒருத்தன் மனஸில் ஜாஸ்தியாக இருக்கிறதோ, அதைப் பற்றிய சிந்தனைதான் அந்திமத்தில் வரும். இப்படி நமக்குக் கடைசியில் பகவத் ஸ்மரணம் வருமா என்று நிச்சயப்படுத்திக் கொள்வதற்கு ஒரு பரீட்சை வைத்துக் கொள்ளலாம். அதாவது :

அன்றன்றைக்கும் நாம் தூங்குகிறோம் அல்லவா ? இதையும் ஒரு சாவு மாதிரி என்றுதான் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. தூங்குகிற போது கட்டை போல ஒன்றும் தெரியாமல், ஞானமே இல்லாமல்தானே கிடக்கிறோம் ? இதனால்தான் இப்படிச் சொல்லியிருக்கிறது. 'நித்யப் பிரளயம்' என்று தூக்கத்தைச் சொல்வார்கள். இப்படித் தினமும் நாம் 'சாகிற'போது பகவானையே ஸ்மரித்துக் கொண்டு 'சாக' முடிகிறதா என்று அப்பியாசம் பண்ணிப் பார்க்கலாம். தூங்குகிறதற்கு முன்னால் நம் இஷ்ட தேவதையையே ஸ்மரித்துப் பார்க்க வேண்டும். அந்த நினைப்போடேயே தூக்கத்தில் ஆழ்ந்துவிட வேண்டும். வேறே நினைப்பு வரக்கூடாது. சொல்லும் போது சுலபமாக இருக்கும். ஆனால் பண்ணிப் பார்த்தால் எத்தனை கஷ்டம் என்று தெரியும். காமாக்ஷியையோ, நடராஜாவையோ, தக்ஷிணாமூர்த்தியையோ, ரங்கநாதரையோ, வேங்கடரமண ஸ்வாமியையோ, முருகனையோ – எந்த தெய்வமாக வேண்டுமானாலும் இருக்கலாம். அந்த இஷ்ட தெய்வத்தையே – அல்லது தெய்வத்துக்கு ஸமானமாக நமக்குச் சாந்தியும் சந்துஷ்டியும் தருகிற ஒரு குரு, அல்லது மகானையோ வேறே நினைப்பு வராமல் ஸ்மரிப்பதென்றால், 'இதிலே என்ன கஷ்டம் இருக்கிறது ? மனஸுக்கு ரம்யமாக, ஆறுதலாக இருக்கப்பட்ட இந்த ரூபங்களையே நினைப்பதில் என்ன சிரமம் ?' என்றுதான் தோன்றும். ஆனால் எதனாலோ, சிறிது நேரமானால் இத்தனை நல்ல, இவ்வளவு ரம்யமான ஸ்மரணையை விட்டுவிட்டு இந்த மனசு வேறெங்கேயாவது தான் போய் விழும். அப்படியே கண்ணை அசக்கித் தூக்கத்தில் கொண்டு போய் விட்டுவிடும். இப்படி ஏமாறாமல் பழக்கிக் கொண்டால், சாகிற சமயத்திலும் பகவானை விடாமல் நினைக்க முடியும் என்ற நிச்சயத்தைப் பெறலாம். எல்லாம் அப்பியாஸத்தில், விடா முயற்சியில்தான் இருக்கிறது. நம்முடைய சிரத்தையைப் பொறுத்துப் பரமாத்மாவே கைகொடுப்பார்.

ஆக, வாழ்நாள் பூராவும் எதிலே ரொம்பவும் ஈடுபாடு இருக்கிறதோ, அதுதான் அந்திமத்திலும் ஒருத்தனை இழுக்கும். வாழ் நாள் முழுவதும் பகவத் சிந்தனையோடு இருந்தால் தான் கடைசியிலும் அது ஸித்திக்கும். சரி, அது தானாகவே ஸித்தித்துவிட்டுப் போகிறது. இவன் ஜீவிய காலம் முழுதும் ஈச்வர பக்தி பண்ணிக் கொண்டேயிருந்தால், கடைசியில் இவன் படுக்கையில் விழுந்த போதும் தானே – 'ஆட்டோமாடிக்' ஆக – அதே ஸ்மரணம்தான் இருக்கப் போகிறது. ஆனதால், ''ஸர்வ காலத்திலும் என்னை நினை'' என்று சொன்ன கிருஷ்ண பரமாத்மா ''அந்திமத்திலும் என்னை நினை'' என்று ஒன்றைச் சேர்த்திருக்க வேண்டாமே! ஸர்வகால ஸ்மரணை தானாகவே அந்திமத்திலும் வந்துவிடுகிறது!

இங்கேதான் மோக்ஷத்துக்குக் கொஞ்சம் குறுக்கு வழி ( *Short – cut* ) சொன்ன மாதிரி இருக்கிறது. 'ஒருத்தன் அந்திமத்தில் எதை எதை நினைத்துக் கொண்டு உடம்பை விட்டாலும் அதனையே போய் அடைகிறான்' என்று கீதையில் ஸ்பஷ்டமாகச் சொல்கிறார் :

**யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜத்**
**யந்தே களேபரம் |**
**தம் தம் ஏவைதி கௌந்தேய ஸதா**
**தத்பாவ பாவித: ||**

இப்படிச் சொல்கிற போது வாழ்நாள் முழுக்க நினைக்காத ஒன்றை ஒருத்தன் அந்திமத்தில் நினைத்துவிட்டாலும் சரி, அந்திமத்தில் நினைத்ததையே அடைந்து விடுவான் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள இடம் இருக்கிறது.

(தொடரும்)

---

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

# மார்கோ சோப்

## உங்கள் சருமத்தை சுத்தமாக வைத்துக் கொள்வதற்கு மட்டு மல்ல. இது அதிக வலுவையும் திடத்தையும் உடலுக்கு அளிக்கிறது.

இது இந்நாட்டின் ஒரு முக்கிய இரசாயன சாலையின ஆராய்ச்சி மூலம் அறியப்பட்ட ஒரு மகத்தான உண்மை இயற்கையின் அன்பளிப்பான 'நீம் எண்ணை' கொண்டு தயாரிக்கப்படும் ஒரே சோப் மார்கோ தான்.
மார்கோவில் மட்டுமே இந்த நீம் எண்ணையின் குணமும் மணமும் அமைந்துள்ளது. உங்கள் உடலை சுத்தமாக வைப்பதோடு மட்டுமல்லாமல் திடமாகவும் இருக்க மார்கோ உதவுகிறது. ஆகையால்தான் மார்கோ சோப் 1920-ம் வருடம் முதல் நிலையான புகழுடன் விளங்குகிறது.




மார்கோ சோப்
எக்காலத்திற்கும் எல்லா
வயதினருக்கும்
ஏற்றது.

IDL/MGN/1Ta

கல்கத்தா கெமிக்கலின் ஒரு தயாரிப்பு

# இளைஞர் ஒருவரின் இமாலய சாதனை!

அறுபதாயிரம் கிலோ மீட்டர் பயணம் செய்து, இமயம் முதல் குமரி வரையுள்ள 120 இடங்களில் படப் பிடிப்பு நடத்தி, இருபது மாதங்கள் பாடுபட்டு, 19 லட்சம் ரூபாய் செலவில் ஒரு திரைப்படம் தயாரித்திருக்கிறார் இளைஞர் திரு கிருஷ்ணசாமி. நாலு மணி நேரம் ஓடுகிற இந்தப் படத்தில் நாலு விநாடிகள்கூட அலுப்புத் தட்டவில்லை!

இத்தனைக்கும் இந்தப் படத்தில் பிரபல நட்சத்திரங்கள் யாரும் நடிக்கவில்லை, கற்பனைக் கதை ஏதுமில்லை, திடீர் திருப்பங்கள், மற்றும் சண்டை, காதல், டூயட் காட்சிகள் என்று ஒன்றும் கிடையாது.

பிறகு என்ன இருக்கிறது? சிந்து சமவெளி தொடங்கி இந்திராகாந்தி வரையிலான பாரதத்தின் சரித்திரமே படக் கதை. சரித்திரத்தோடு பல்வேறு மதங்களின் தோற்றம் – வளர்ச்சி, கலாச்சார பாதிப்புக்கள், சமூக வாழ்வில் மாற்றங்கள், சமுதாய, பொருளாதார முன்னேற்றங்கள் முதலியவற்றையும் இணைத்து அற்புதமான வண்ணப் படமாகத் தயாரித்துள்ளார்.

படப் பிடிப்பு இருபது மாதங்களே நடந்தன என்றாலும் அதற்குமுன் ஆராய்ச்சிகள் நடத்தவும் விளக்க உரையை எழுதவும் பல வருஷங்கள் பிடித்தன திரு கிருஷ்ணசாமிக்கு.

இப்படி ஒரு லட்சியப் படம் எடுக்க வேண்டும் என்று அவருக்கு என்று, ஏன் தோன்றியது?

சில ஆண்டுகளுக்குமுன் கிருஷ்ணசாமி, டாக்குமெண்டரி படங்கள் எடுக்கத் தொடங்கிய போது அவரிடம் இருந்த மூலதனம், ரூபாய் பதினாறும் அமெரிக்காவில் கொலம்பியா பல்கலைக் கழகம் வெகு ஜனத் தொடர்பு இயலில் (Mass Communication) அவருக்கு அளித்த பட்டமும்தான். பதினாறு ரூபாய்க்கு லெட்டர்ஹெட் தயாரித்துக் கொண்டு இத்துறையில் இறங்கி வெகு சீக்கிரத்தில் இந்தியாவிலேயே மிக அதிகமான டாக்குமெண்டரிப் படங்கள் தயாரிப்பவராக வளர்ச்சி அடைந்தார். (மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்த ஃபிலிம்ஸ் டிவிஷன் நீங்கலாக) விளம்பரப் படங்கள் ஏராளமாகத் தயாரித்து வந்தார்.

ஆனால் இந்த வெற்றியெல்லாம் கிருஷ்ணசாமிக்குப் போதவில்லை. ஏதாவது பெரிய சாதனை புரிய வேண்டும் என்ற அரிப்பு சதா இருந்து கொண்டே இருந்தது. அவர்





"குப்புசாமிக்குச் சீட்டாட்டத்தில் அவ்வளவு அதிர்ஷ்டம் இருக்கிறதே. ஆனால் குதிரைப் பந்தய மைதானத்தில் மட்டும் கோட்டை விட்டுவிடுகிறானே?"

"சின்ன விஷயம். குதிரைகளைக் குலுக்க அவனை யார் விடுகிறார்கள்?"

— எஸ். எல்.

---

அமெரிக்காவில் படித்துக் கொண்டிருக்கும் போதே இந்தியாவைப் பற்றிய பல தவறான அபிப்பிராயங்கள் அங்கு நிலவுவதை உணர்ந்திருந்தார். இந்திய இலக்கியம் என்றால் காம சூத்திரத்தையும் இந்து மதம் என்றால் பசுவைப் பின்தொடர்ந்து கையேந்திச் செல்வோரையும்தான் அமெரிக்காவில் பெரும்பாலோர் எண்ணிப் பார்த்தார்கள். எனவே, பாரதத்தின் சரித்திரம், மதங்கள், கலாச்சாரம் முதலியவற்றைச் சரியான விதத்தில் அயல் நாட்டவருக்குப் படம் பிடித்துக் காட்ட வேண்டும் என்ற எண்ணம் அந்த மாணவப் பருவத்திலேயே அவர் உள்ளத்தில் தோன்றி விட்டது.

இந்தியா திரும்பிய பிறகு 1964ல் முயற்சியைத் தொடங்கினார். பத்து ஆண்டு ஆராய்ச்சிக்குப் பிறகு, 'இப்போது படம் பிடிக்கலாம்' என்ற நம்பிக்கை அவருக்குப் பிறந்தது. படத்துக்குத் தேவையான விளக்க உரையும் தயாராகிவிட்டிருந்தது. ஆனால் பணத்துக்கு எங்கே போவது? 'பிரமாதமான திட்டம்' என்று போற்றிப் புகழ்ந்து, பணம் தந்து உதவுவதாகவும் வாக்களித்த பல பெரிய மனிதர்கள், பிறகு 'இந்தப் படம் பொருளாதார ரீதியில் வெற்றிபெறுமா? நம் பணம் திரும்பி வருமா?' என்று யோசிக்கத் தொடங்கி கிருஷ்ணசாமியைக் காலை வாரி விட்டார்கள். இளைஞர் கிருஷ்ணசாமி கலங்கவில்லை. ஆப்த நண்பர்கள் சிலரது இயன்ற அளவு உதவியை ஏற்றார். மார்வாடிகளிடம் துணிந்து பெரும் வட்டிக்குக் கடன் வாங்கினார். படப் பிடிப்பை ஆரம்பித்தும் விட்டார். இத்தருணத்தில் அந்த அதிசயம் நிகழ்ந்தது. கானரா பாங்க் அவருக்கு உதவ முன் வந்தது! திரைப்படம் தயாரிக்க பாங்கு கடன் தருவது என்பது விதிமுறைகளுக்கே முரணானது. என்றாலும் இந்தப் படத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்த உயர் அதிகாரி திரு வேங்கடராமன் துணிந்து செயல்பட்டார். விளைவு, இன்று 'மகத்தான வெற்றி' என்று கூறத் தக்க அளவில் படம் பூர்த்தியாகிவிட்டது. அதனைப் பார்க்கும் நாம் 'சரித்திரத்தை இவ்வளவு சுவாரஸ்யமாக எடுத்துரைக்க முடியுமா?' என்று வியந்து போகிறோம்.

அத்தனை சுவையாக அமையக் காரணம் திரு கிருஷ்ணசாமி கையாண்டுள்ள உத்திதான். ஆதி நாளிலிருந்து சரித்திரத்தைக் கூறி வரும் போது அந்தப் பழங் காலத்திய சரித்திரச் சின்னங்களாக இன்று விளங்கும் கோயில்கள், மசூதிகள், கோட்டை கொத்தளங்கள் அரண்மனைகள் முதலியவற்றுக்கு நம்மை அழைத்துப் போகிறார். கூடவே, அந்தந்தக் காலத்தின் பாதிப்புகளை, சமூக, கலாச்சார, சமய நோக்குகளில் இன்றைக்கும் எப்படி அனுபவித்து வருகிறோம் என்று நிகழ் காலத்துக்கும் வருகிறார். கருத்து மாறுபாடுகள் உள்ள அம்சங்களில் இரு தரப்பு வாதங்களையும் கூறியிருக்கிறார். சமுதாய நோக்கில் சரித்திரத்தின் பாதிப்புகளைச் சுட்டும் போது நம்மிடம் இருந்து வந்த, இன்றும் இருந்து வருகிற குறைபாடுகளை ஒளிவு மறைவு இன்றி எடுத்தியம்புகிறார். இவற்றை நீக்க நாம் எடுத்து வரும் முயற்சிகளையும் கூடவே சொல்கிறார். சொல்லுக்குச் சொல் அவரது கருத்தைக் காமிரா படம் பிடித்து விடுகிறது.

இப்படிப் பழமையையும் புதுமையையும் நிறைகளையும் குறைகளையும் இணைத்துப் பார்க்கும் அழகுதான் படத்தின் வெற்றிக்கு அடிப்படை. தேடித் துருவிப் பார்த்தால் படத்தில் குற்றம் ஏதாவது கண்டு பிடிக்கலாம்தான். ஆனால் அறுசுவை உண்டி நல் விருந்தாகும்போது பச்சடியில் ஓர் உப்புக் கல் தூக்கல் என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள்?

அமெரிக்க நிறுவனமான வார்னர் பிரதர்ஸ் இப்படத்தின் விநியோக உரிமைகளைப் பெற்றுள்ளது. அமெரிக்காவில் டெலிவிஷனில் காண்பிப்பதற்கான முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறது.

பாரத அரசு, ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க நாடுகள் பலவற்றில் காண்பிக்க உரிமைகளை ஏற்றுக் கொண்டிருக்கிறது.

யுனெஸ்கோவின் பாராட்டைக் குறைவின்றிப் பெற்றுள்ள இப்படம் ருஷ்யாவுக்குச் செல்வதற்கான அறிகுறிகளும் காணப்படுகின்றன.

இப்படி உலகம் முழுவதும் நமது பாரம்பரியப் பெருமைகளை உணர்த்தும் வாய்ப்புப் பெற்றுள்ள கிருஷ்ணசாமி, டைரக்டர் கே. சுப்பிரமணியம் அவர்களின் மகன்!

ஓட்டப் பந்தயத்தில் வெற்றிக் கட்டத்தை முதலாவதாக அடைந்த விளையாட்டு வீரன் என்ன செய்கிறான்? மூச்சிறைக்க அப்படியே தரையில் விழுகிறான். அப்படித்தான் இருபது மாதப் படப் பிடிப்பு முடிந்ததும் படுக்கையில் விழுந்த கிருஷ்ணசாமி மூன்று வாரங்களுக்குப் பிறகுதான் எழுந்தார் — இறையருளால் பூரண ஆரோக்கியத்துடன்.

மத்தியஅரசின் பத்திரிகை தகவல் இலாக்கா படப் பிடிப்பின் போது கிருஷ்ணசாமிக்கு முழு ஒத்துழைப்பை நல்கி இருக்கிறது. காஞ்சி ஸ்ரீ சங்கராச்சாரியார், ஸ்ரீ மால்கம் ஆதிசேஷய்யா போன்ற அறிஞர்கள் கிருஷ்ணசாமிக்கு அவ்வப்போது ஏற்பட்ட சந்தேகங்களுக்கு விளக்கம் கொடுத்திருக்கிறார்கள்.

இ. என். பாலகிருஷ்ணன், வி. பாலகிருஷ்ணன் ஆகிய இருவரும் பிரமிக்கத்தக்க விதத்தில் காமிராவைக் கையாண்டிருக்கிறார்கள்.

**Indus valley to Indira Gandhi** என்ற இப்படம் முக்கியமாக அயல்நாட்டவரை மனத்தில் கொண்டே தயாரிக்கப்பட்டது என்றாலும் இதனைப் பார்க்கக் கொடுத்து வைத்த ஒவ்வோர் இந்தியனும், இந்தியனாய்ப் பிறந்ததற்காக முன்னிலும் அதிகமாகப் பெருமைப்படுவான் என்பது நிச்சயம்.

— இ. ராஜேந்திரன்

என்லைஸ்மென் தியேட்டர்ஸ்
அளிக்கும்

# அவன் பார்த்துப்பான்

தொடர் நாடகம்







## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| சர்மா | — | மேஜர் சுந்தரராஜன் |
| சிவராமன் | — | சிவகுமார் |
| கல்யாணி | — | எம். பானுமதி |
| ரங்கநாயகி | — | நாஞ்சில் நளினி |
| தீபா | — | புஷ்பா ராணி |
| ஏழுமலை நாயுடு | — | வி. ராஜகோபால் |
| சொக்கலிங்கம் | — | கோகுல்நாத் |
| பிரசாத் | — | திலக் |
| நித்தியானந்தன் | — | நரசிம்மன் |
| ஆனந்தன் | — | சதீஷ் |
| இளமுருகு | — | ஆர். ஸ்ரீநிவாசன் |
| நீலகண்டன் | — | பத்ரி |
| கார்மேகம் | — | கிருஷ்ணன் |
| தீர்த்தபதி | — | வி. எஸ். பாஸ்கரன் |
| பஞ்சநாதம் | — | என். காசிநாதன் |
| கிழவன் | — | ஏ. ராதாகிருஷ்ணன் |

கதை வசனம்: கோமல் சுவாமிநாதன்
டைரக்ஷன்: மேஜர் சுந்தரராஜன்
தயாரிப்பு: என். எஸ். நடராஜன்






### முன்னுரை

ஆண்டவன் என்ற கருத்து தோன்றிய அன்றே அவன் இல்லையென்ற கருத்தும் தோன்றிவிட்டது.

பல்லாயிரக்கணக்கான வருடங்களாக இந்த அறிவுப் போராட்டத்தில் சத்தியத்தைக் கண்டுபிடிக்கும் வழி எது என்று திகைத்துப் போயிருக்கிறது மனித இனம்.

இந்த மனித இனத்தின் ஒரு பிரதிநிதிதான் இந் நாடகத்தின் கதாநாயகன் சிவராமன்.

ஆண்டவனைத் தேடும் முயற்சியில் அவன் அடைந்த சத்திய தரிசனமே இந்த நாடகம்.

× × ×

## காட்சி 1

(ஒரு நடுத்தர வர்க்கத்தினர் வீடு. மாடியில் வீட்டுச் சொந்தக்காரர் ஏழுமலை நாயுடுவும் அவர் மனைவி ரங்கநாயகியும் குடியிருக்கிறார்கள். முன் பகுதியில் சிவராமனும் அவன் தம்பி நித்தியானந்தமும் குடியிருக்கிறார்கள். கீழே ஒரு பகுதியில் சமையல்காரர் சர்மா குடியிருக்கிறார்.

காட்சி ஆரம்பத்தில் சர்மா தன் பகுதியில் ஸ்வாமி படத்துக்கு முன் தீபாராதனை காட்டுகிறார். நித்யானந்தம் ஓர் ஓரத்தில் படித்துக் கொண்டிருக்கிறான். சர்மா பூஜை முடிந்து தட்டை வெளியே கொண்டு வருகிறார்.)

சர்மா: நித்யானந்தம்!

நித்யானந்தம்: என்ன சர்மாஜி! இன்னிக்கு என்ன சீக்கிரமா பூஜையை முடிச்சிட்டீங்க!

சர்மா: ஆமா. நாளன்னிக்கு ராமன் மோட்டார்ஸ் சுந்தரராமன் பொண்ணுக்கு ஆபட்ஸ்பரியிலே கல்யாணம். ஐயாயிரம் இன்விடேஷன் அனுப்பியிருக்கான். மூவாயிரம் பேராவது கல்யாணத்துக்கு வருவா. நான் போய்த்தான் எல்லா ஏற்பாடும் பண்ணணும்.

நித்யா: அதானே! பெரிய மனுஷங்க வீட்டுக் கல்யாணமானால் சர்மா சமையல் இல்லாமல் நடக்காதே!

சர்மா: இதில் என்ன வேடிக்கை தெரியுமோ! சுந்தரராமன் பொண்ணைக் கொடுக்கிறானே, அந்த சம்பந்தி ஜகதீசய்யர் என்ன சொல்லிட்டார் தெரியுமோ! சீர் செனத்தி எல்லாம் எப்படி வேணும்னாலும் பண்ணிக்கோ. சமையலுக்கு மட்டும் சர்மாவை ஏற்பாடு பண்ணணும். அது கண்டிஷன்னு சொல்லிட்டாராம்! சுந்தரராமன் கடைசி நேரத்தில் ஓடி வந்தான். அன்னிக்கு மூணு முகூர்த்தம் ஒத்தின்டிருக்கேன். பசங்களை அனுப்பிச்சுட்டு நீங்க எல்லா ஏற்பாடும் பண்ணி வைங்கோ உப்பை மட்டும் நான் வந்து போடறேன்னு சொல்லிட்டு வந்தேன்.

நித்யா: ஏன் சர்மாஜி! இந்த கெஸ்ட் கண்ட்ரோல் ஆர்டர் வந்தவுடனே உங்க மாதிரி சமையல்காரர் பாடெல்லாம் கொஞ்சம் கஷ்டம்தானே?

சர்மா: எனக்கு ஒண்ணும் கஷ்டமில்லே. ஆண்டவன் எப்படியாவது எனக்குப் படியளப்பான். பார்க்கப் போனா நான் சமையல்காரனா வந்ததே எப்படீங்கறே! எங்கப்பா என்னைத் திருப்பராய்த்துறை பாடசாலையில் போட்டு வேதம் படிக்க வச்சார்.

○ "அட பைத்தியக்காரா! அந்த டெலஸ்கோப்பைத் தனக்குள்ளே செலுத்திப் பார்த்திருந்தான்னு ஆண்டவன் இருக்கிற இடம் தெரிந்திருக்கும்!"





" என்னப்பா இது, கார்டு ?"
" பல்லுக்கு வேட்டாயிடும் வா, மோனி !"

பன்னெண்டு வருஷம் வேதம் படிச்சேன். அமாவாசைத் தர்ப்பணம் பண்றதுக்கோ, பெத்த தோப்பனுக்குச் சிராத்தம் பண்ற துக்கோ நம்மடவாளுக்குச் சிரத்தைஇல்லே. இதுலே ஹோமம், ருத்ரம், வேத பாரா யணம்னு எங்கே பண்ணிண்டு இருக்கா! தோப்பனார் காலமான பிறகு அம்மா வோட சமையல்கட்டுலே பூந்துட்டேன். அம்மா கத்துக் கொடுத்த தொழில்தான் என்னை-வாழவெச்சிண்டிருக்கு. என் புள்ளை யையும் மேல படிக்க வச்சது!

நித்யா: உங்க பிள்ளை ஏன் இங்கே வரதே இல்லே! நீங்க இங்கே குடி வந்து இரண்டு வருஷம் ஆறது. உங்க புள்ளையை ஒருநாள் கூடப் பார்த்ததே யில்லையே!

சர்மா: விசாகபட்டணத்திலே வேலையா யிருக்கான். அநேகமா மெட்ராசுக்கே மாத்தலாயிடும்னு எழுதியிருக்கான். இங் கேயே வந்துடுவான்னு நெனைக்கிறேன். ஆமா — உங்கண்ணா சிவராமனை எங்கே காணோம்? — காலங்கார்த்தாலே எங்க போயிட்டான்?

நித்யா: அவன் பத்திரிகை ஆசிரியன். ஏதா வது எங்கேஜ்மெண்ட் இருக்கும். போயிருப் பான்.

சர்மா: அவனோட ஒரு சின்னச் சண்டை போடணும்னு வந்தேன். அப்புறம் போட் டுக்கறேன்.

நித்யா: சிவராமனோட என்ன சண்டை, சர்மாஜி!

சர்மா: மூங்கில் பூ பத்திரிகையிலே அவன் என்னவெல்லாமோ எழுத ஆரம்பிச் சுட்டான்.

நித்யா: மூங்கில் பூ அவன் ஆசிரியரா இருக் கிற பத்திரிகை. அதில் என்ன வேணும் னாலும் எழுத அவனுக்கு உரிமை இருக்கே!

சர்மா: எதை வேணும்னாலும் எழுதட்டும். ஆனா யாரையும் தாக்கி எழுதப்படாது.

நித்யா: யாரைத் தாக்கி எழுதியிருக்கான்?

சர்மா: மனிதர்களைத் தாக்கி அவன் எழு தல்லே, கடவுளையே, தாக்கி எழுதியிருக் கான்.

நித்யா: சிவராமனுக்கும் கடவுள் நம்பிக் கைக்கும் ரொம்ப தூரம். கடவுள் ஒருத்தர் இருக்கார். அவர் இந்த உலகத்தை ஆட்டிப் படைக்கிறார் என்பதையே அவன் நம்புற தில்லே!

சர்மா: அந்த உண்மையை ரொம்ப சீக்கிரம் அவனே அவனுக்குப் புரிய வைப்பான்.

(சிவராமன் கையில் பெட்டியுடன் களைப்புடன் வருகிறான்.)

சிவராமன்: என்ன சர்மாஜி! யார் எந்த உண்மையை எனக்குச் சீக்கிரம் புரிய வைக் கப்போறாங்க?

சர்மா: அது கிடக்கட்டும். முதல்ல பிர சாதம் இட்டுக்க.

(பிரசாதத் தட்டை நீட்டுகிறார்.)

சிவரா: எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லேன்னு தெரிஞ்சுக்கிட்டே இதை நீட்டுறீங்களே.

சர்மா: என்ன பண்றது? உலகத்தில் உள்ள அத்தனை நல்ல குணமும் உங்கிட்ட இருக்கு. ஆனா தெய்வ பக்தி இல்லையேன்னு எனக்கு வருத்தம்.

சிவரா: நான் தெய்வத்தை நம்புறதினா லேயோ நம்பாம இருக்கிறதினாலேயோ சமுதாயத்துக்கு எதுவும் பெரிய விளைவுகள் ஏற்பட்டுடப் போறதில்லே! தனிப்பட்ட முறையில் மனித சக்திக்கு மேலான ஒரு சக்தி இருக்க முடியாதுன்னு நான் நம்பிக்கிட்டிருக்கேன்.

சர்மா: தனிப்பட்ட முறையில் உன் நம் பிக்கை எப்படி வேணும்னாலும் இருக்க லாம். சமுதாயத்தில் ஒரு பத்திரிகை ஆசிரியனாக இருக்கிறவனுக்குச் சில பொறுப்புகள் உண்டு.

சிவரா: என்னுடைய மூங்கில் பூ பத்திரி கையில் நான் அப்படி எதுவும் பொறுப் பற்ற முறையில் எழுதலியே சர்மாஜி.

சர்மா: ஏன் எழுதல்லே! பல்லாயிரக்கணக் கான வருஷங்களாக, இந்த நாட்டிலே, வேத புத்தகமா இருக்கு! எத்தனையோ அறிஞர்கள் போற்றிய புத்தகம், மனித குலம் என்றைக்குமே இழக்க முடியாத

## சிறு தவறும் நேருஜிக்கு உதவாது!

1958-ம் ஆண்டு. நேருஜி ஊட்டிக்கு விஜயம் செய்திருந்தார். அவ்வூர்ப் பிரமுகர்கள் "லானி இன்ஸ்டிடியூட்" என்ற இடத்தில் நேருஜிக்கு அன்று காலையில் வரவேற்பு அளிக்கவிருந் தார்கள். நேருஜியும் சரியான நேரத் தில் ஒரு திறந்த காரில் நின்றபடி வழக்கம்போல் சாலையோரம் நின் றிருந்த மக்களைப் பார்த்து உற்சாக மாகக் கையசைத்துப் புன்முறுவல் பூத்தவாறு வந்து கொண்டிருந்தார்.



லானி இன்ஸ்டிடியூட்டின் 'அவுட்' என்று போடப்பட்ட கேட், வரும் வழியில் முதலில் இருந்த தால், முன்னால் வந்த பைலட் கார் அவ்வழியே நுழைய, நேருஜி வந்த காரும் நுழைவதிருந்த சமயம் நேருஜி "ஸ்டாப்" என்று மிகுந்த கோபத் துடன் குரல் கொடுத்து, நின்ற காரிலிருந்து இறங்கி, அருகிலிருந்த மாவட்டப் போலீஸ் அதிகாரியைப் பார்த்து, "எப்படி 'அவுட்' கேட்டில் கார் நுழைய லாம்?" என்று கேட்டுவிட்டுச் சிறிது கோபத்துடன் விடுவிடுவென்று நடந்தே சுமார் அரை பர்லாங் நீளச் சாலையைக் கடந்து சென்று, வரவேற்பு விழா நடைபெறவிருந்த கட்டிடத்துக்குச் சென்றார். நேருஜி யின் அச்செயலை இன்று நினைத்தாலும் பெருமை யாக இருக்கிறது.

— ஆர். வெங்கட்ராமன்

---

மகத்தான தத்துவம் பகவத் கீதை! பெரிய பெரிய அறிஞர்களே சொல்லியிருக்கா. இப்ப அதை எதிர்த்து நீ போர்க் கொடி தூக்கி இருக்கே!

சிவரா: அறிஞர்கள் சொல்லிட்டதுலை அதை அப்படியே ஏற்றுக் கொள்ளணும்கிற அவசியமில்லையே, சர்மாஜி! அதைப்பத்தி 'திங்க்' பண்ணி ஒரு முடிவுக்கு வருவதில் என்ன தப்பு?

சர்மா: சில விஷயங்களைத்தான் மனித அறிவு 'திங்க்' பண்ண முடியும். சிந்தனைக் கெட்டாத சில விஷயங்களைத் 'திங்க்' பண்ண நம் அறிவைப் பக்குவப்படுத்த ணும். அதுக்கு வேண்டிய முயற்சி நமக்கு இல்லாதபோது — அறிவுல மேம்பட்டவங்க சொல்றதை ஏத்துக்கொள்வதில் என்ன தப்பு!

சிவரா: கடவுள் இல்லேன்னு சொல்ற வங்களும் சாதாரண மனிதர்கள் இல்லே. பெரிய விஞ்ஞானிகள், அறிவாளிகள் தான். உலகத்திலேயே பெரிய வான சாஸ்திரி "வாலண்ட்" சொல்லி இருக் கார், என் டெலெஸ்கோப்பை வான மண் டலம் முழுக்கச் சுழற்றிப் பார்த்துட்டேன். கடவுள் இருக்கிற இடம் எதுவுமே இல் லேன்னு !

சர்மா: பைத்தியக்காரா... அந்த டெலெஸ் கோப்பைத் தனக்குள்ளே செலுத்திப் பார்த்திருந்தான்னா ஆண்டவன் இருக்கிற இடம் தெரிஞ்சிருக்கும்.

சிவரா: ஒவ்வொரு மனிதனையும் 'போஸ்ட் மார்ட்டம் பண்ணிப் பார்த்தா அங்கே ஆண்டவன் இருப்பான்னு சொல்றீங்களா?

சர்மா: உடம்பைத்தான் நீ போஸ்ட் மார்ட் டம் பண்ணலாம். ஆண்டவன் ஆத்ம சொருபன். அவனைப் போஸ்ட் மார்டம் பண்ண முடியாது.

சிவரா: என் அறிவினாலேயே ஆண்டவனைப் போஸ்ட் மார்ட்டம் பண்ண முடியும்.

சர்மா: இப்ப உன்னோடு வாதாட எனக்கு நேரமில்லே! அதோட கடவுள் இருக்கிறது வாதாடி நிரூபிக்க வேண்டிய விஷயமு மில்லே. அவனவன் உணர வேண்டிய விஷயம். (உள்ளே போக முற்படுகிறார்.)

சிவரா:— சர்மாஜி! இன்னிக்கு என்ன சமையல்?

சர்மா: மிளகு ரசம் வைச்சிருக்கேன். ஒரு டம்ளர் சாப்பிடறயா?

சிவரா: கொண்டு வாங்க. கொண்டு வாங்க. தேவர்களும் அசுரர்களும் பாற் கடலைக் கடையும்போது நீங்க இருந் திருந்தா தேவர்கள் எல்லாம் எங்களுக்கு அமிர்தம் வேண்டாம், இந்த மொளகு ரசம் போதும்னு ஓடி வந்திருப்பாங்க.

சர்மா: வெட்கமா யில்லை உங்களுக்கெல் லாம்! நீங்கள்ளாம் புராணம் இதிகாசம் இதெல்லாம் பொய்னு சொல்லிண்டே இருப்பேள். ஆனா உபமான உபமேயம் சொல்றதுக்கு மாத்திரம் புராணத்தைத் தேடி ஓடுவேள்.

(சர்மா உள்ளே போய் ரசம் கொண்டு வருகிறார்.)

சிவரா:- சர்மாஜி! ரசம் ரொம்பப் பிர மாதம்.

(மாடி போர்ஷனில் குடியிருக்கும் வீட்டுச் சொந் தக்காரர் அறுபது வயதுள்ள ஏழுமலை நாயுடு பரபரப்புடன் ஓடி வருகிறார்.)

ஏழுமலை: யப்பா...யப்பா...

சிவரா: என்ன நாயுடுகாரு என்ன விஷயம்?

ஏழுமலை: யப்பா! எனக்கொரு வழி பண்ணி விட்டுடுப்பா. அந்த கிழவி தொல்லை தாங்கவே முடியல்லேப்பா.

சிவரா: எது உங்க சம்சாரத்தையா சொல் றீங்க?

ஏழுமலை: வேற எவளைச் சொல்லுவேன்? காஞ்சிவரத்திலே கருட சேவை. உடனே புறப்பட்டுப் போகணுங்கிறா. நாலு நாளா வாய் ஓயாம லொக்கு லொக்குன்னு இருமிக்கிட்டிருக்கா. இந்த நிலையிலே காஞ்சிவரம் போகவேணுங் கிறேன். கேக்க மாட்டேங்குறா. நாளைக்கு நீட்டி நிமிர்ந்து படுத்துட்டா என் கதி என்ன ஆகிறதுப்பா?

(ஏழுமலை நாயுடுவின் மனைவி ரங்கநாயகி வரு கிறாள். வயது ஐம்பத்தைந்து இருக்கும்.)

ரங்க: என்னப்பா நீ! பெருமாளைப் பார்க் கத்தானே போறோம். அவர் என்ன தவிக்க விட்டுடுவாரா? சிவராமப்பா காஞ்சிவரம் கருடசேவை நீ பார்த்ததில்லையே. என்ன கண்கொள்ளாக் காட்சி! பெருமாளே சொர்க்கத்திலே இருந்து இறங்கி வந்த மாதிரி இருக்கும்பா.

சிவரா: அம்மா உங்க உடம்பு சரியில்லையே! ஓய்வு எடுத்துக்கிட்டா என்ன?

ரங்க: அட என்னப்பா உடம்பு! பெரு மாளைச் சேவிச்சிக்கினு இருக்கறப்பவே பொட்டுன்னு உயிர் போயிட்டா எவ்வளவு பாக்கியம்!

# எண்ணிய வண்ணம்
# எண்ணற்ற டிசைன்
# மதுரை துணிகள் - அணிந்திடப் பெருமை

பாலியெஸ்டர் மற்றும் பாலியெஸ்டர் இழைகளில்
சூட்டிங்குகள் மற்றும் ஷர்ட்டிங்குகளில்
எண்ணிலடங்காத ரகங்கள்.

மதுரை துணிகள்—தயாரிப்பாளர்கள்:

## மதுரை கோட்ஸ்



டிஸ்ட்ரிபியூட்டர்கள்: மதுரா சௌத் இந்தியா கார்ப்பொரேஷன் (பி) லிட்., 45, மூர் தெரு, சென்னை-600 001 ■ T. M's டெக்ஸ்டைல்ஸ் 126, தெற்கு மாசி வீதி, மதுரை ■ சையத் டெக்ஸ்டைல்ஸ், 98, வடக்கு ரத வீதி, திருநெல்வேலி டவுன் - 627 006 ■ VVCR முருகேச முதலியார் & சன்ஸ், 27, கண்ணுராத் தெரு, செவ்வாய்ப்பேட்டை, சேலம்-636 002 ■ VVCR முருகேச முதலியார் & சன்ஸ், சிவசண்முகம் பிள்ளைத் தெரு, ஈரோடு ■ ஹாஜி P. சையத் முகம்மத், விருதுநகர்.

MCL-173 TAM

# உயர்தரமான சுவைக்கும் உண்மையான சிக்கனத்திற்கும்

## ரிக்கரி
இன்ஸ்டன்ட்




### அரை டீஸ்பூன் அளவே போதும்
(தேவைக்கேற்ப குறைத்தோ அதிகமாகவோ உபயோகிக்கவும்)




**50 கிராம் சீசாவில் 37 கோப்பைகள்**
மற்றெந்த 50 கிராம் சீசாவை காட்டிலும் 7 கோப்பைகள் அதிகமாக ரிக்கரி அளிக்கிறது. ஏனெனில் ரிக்கரி ஸ்டிராங்கானது. இது சிக்கனத்திற்கு ஒரு சிறந்தவழி.

**அதிக ஸ்டிராங்கானது, அதிக மணமுள்ளதுங்கூட:**
ருசியும், மணமும் மிகுந்த ஸ்டிராங்கான தயாரிப்பு. ஆகவே, ஒரு கோப்பை மணமும் ருசியும் மிக்க நல்ல காப்பிக்கு குறைந்த அளவு ரிக்கரியே போதும்.



**இப்போது ரிக்கரியின் விலை கணிசமாகக் குறைவு!**
50 கிராம் சீசாவுக்கு 50 பைசே விலை குறைக்கப்பட்டுள்ளது.

## ரிக்கரி
இன்ஸ்டன்ட்

**வறுத்து அரைத்த காப்பியின் சுவையை ஏறக்குறைய அதே விலையில் உங்களுக்கு அளிக்கிறது**

NRCM-27-75TAM

ஏழுமலே: சிவராமப்பா! இவளே நான் எங்கே கூட்டிக்கிட்டுப் போகல்லே? நேவாளத்திலே பசுபதி கோவில் பார்த்திருக்கியா, நீ? அங்கே கூட்டிக்கிட்டுப் போயிருக்கேன். குருநையிலே ஏத்தி வச்சு பத்ரிநாத் கூட்டிக்கிட்டுப் போயிருக்கேன். அப்பல்லாம் உடம்புல தெம்பு இருந்திச்சு. ஊரைச் சுத்திளேம்.

ரங்க: அதெல்லாம் இல்லேன்னு சொல்ல லேயே! மவராசனைச் சும்மா சொல்லப் படாது. திருப்பதிக்கு நாத்தெட்டு வாட்டி கூட்டிக்கிட்டுப் போயிருக்காரு! இவனுக்கு உடம்புல மட்டும் தெம்பு இருந்திச்சுன்னு சும்மா விடுவாரா?

ஏழு: எனக்குத் தெம்பு இருக்குது. உனக்குத் தான் தெம்பு இல்லே!

ரங்க: அதை மட்டும் சொல்லாதேப்பா. கண்ணுலே பார்வை இருக்குது. ரெண்டு கையையும் தூக்கிப் பெருமாளேன்னு சேவிக்கக் கையிலே தெம்பு இருக்குது. வேற என்ன வேணும்?

சர்மா: ஏழுமலே நாயுடு! ஆண்டவன் மேலே பாரத்தைப் போட்டுட்டு அவளேக் கூட்டிக்கிட்டுப் போங்க.

ஏழுமலே: என்ன ஐயரே! உங்கிட்ட ஞாயம் கேட்க வந்தா நீயும் அதுக்குச் சாதகமாப் பேசுறே!

சர்மா: கிளவி ஆசைப்படுது. கூட்டிக்கிட்டுப் போங்களேன்.

ஏழுமலே: என்ன ஐயரே, பொட்டுன்னு அதைக் கிளவின்னு சொல்லிட்டே! நான் மட்டும்தான் அதைக் கிளவின்னு சொல்லலாம். மத்த யாரும் சொல்லப்படாது!

ரங்க: ஐயரு சொல்லிட்டுப் போகட்டும்பா. அவரு வேதம் படிச்சவரு. தப்பாச் சொல்ல மாட்டாரு! நீ புறப்படப்பா. பத்தரைப் பஸ்ஸுக்கே போயிடுவோம்.

ஏழுமலே: சிவராமப்பா, காஞ்சிபுரம் போய் விட்டு வந்திடறோம். வீட்டைப் பார்த்துக்கப்பா.

(ஏழுமலே நாயுடுவும் ரங்கநாயகியும் போகிறார்கள்.)

சிவரா: நல்ல பைத்தியக்காரத் தம்பதிகள்! ஆண்டவன் மேலே இப்படி ஒரு மூட பக்தியா?

சர்மா: அது மூடத்தனம் இல்லேப்பா, சரணாகதி! சாம்பார்ல உப்பு ஐக்கியமாகிற மாதிரி ஆண்டவன் கிட்டே ஐக்கியமாயிட்டாங்க.

சிவரா: என்ன பிரயோசனம்? இவ்வளவு பக்தி பண்றாங்களே நீங்க சொல்ற ஆண்டவன் அவுங்களை நல்லா வைக்கலியே!

சர்மா: ஏன் நல்லா வைக்கல்லே! இந்த வீடு அவுங்களது. இதுல வர வாடகையை வச்சுண்டு சந்தோஷமா பகவான் நாமாவைச் சொல்லிண்டு இருக்கா!

சிவரா: சர்மாஜி! அவுங்க மனசுல தங்களுக்குக் குழந்தை இல்லேன்னு பெரிய குறை இருக்கே. அதை ஆண்டவன் தீர்த்து வைச்சாரா?

சர்மா: அது அவா பூர்வ ஜன்ம பலன்.

சிவரா: இப்படிச் சொன்னு அப்படிச் சொல்லிடுங்கோ. பூர்வ ஜன்ம பலன், விதிப்படி



''டாக்டர், நான் காப்பி குடிக்கும்போதெல்லாம் என் வலது கண்ணில் சுரீர் சுரீர் என்று குத்தி வலி எடுக்கிறது.''

டாக்டர் நோயாளியை நன்றாகப் பரிசோதித்து விட்டுச் சொன்னார்: ''காப்பி குடிக்கும்போது கப்பிலிருந்து ஸ்பூனை எடுத்துவிட்டுக் குடிக்கவும்.'' — எஸ். லலிதா

---

நடக்கும். இப்படி நம்பிக்கிட்டிருந்தா மனிதன் சோம்பேறியாக வேண்டியது தான்.

சர்மா: அதுதான் தப்பு. விதிப்படி நடக்கும்னு வாயை மூடிண்டு நம்ப செய்ய வேண்டிய கர்மாக்களைச் செய்யாம இருக்கக் கூடாது. நாம் ஒரு அடி எடுத்து வச்சா ஆண்டவன் இரண்டடி கிட்ட வருவான்.

(ஏழுமலே நாயுடுவும் ரங்கநாயகியும் ஒரு பெட்டியுடன் கீழே இறங்கி வருகிறார்கள்.)

ஏழுமலே: ஐயரே, கிளவியும் நானும் காஞ்சிபுரம் கிளம்பிட்டோம். வீட்டை ஜாக்கிரதையாப் பார்த்துக்குங்க.

ரங்க: இந்தாங்க சாமி! வீட்டுச் சாவி!

சர்மா: எனக்கும் சேர்த்து வரதராஜப் பெருமாளே வேண்டிண்டு வாங்க.

ஏழுமலே: ஐயரு நல்லா இருக்கணும். அவரு வைக்கிற சாம்பாரு நல்லாருக்கணும்... அதைச் சாப்பிடற ஜனங்க நல்லா இருக்கணும். எல்லாம் சேர்த்து வேண்டிக்கிட்டு வரேன்!

சிவரா: உங்களுக்குக் கொழந்தை பொறக்கணும்னு வேண்டிக்கப் போறதில்லையா?

ஏழு: டைம் பாஸாகிப் போச்சு. சாமியே நினைச்சாலும் இனிமே முடியாது!

ரங்க: நமக்கு எதுக்குப்பா கொளந்தை? அந்தக் கோகுல கிருஷ்ணன்தான் நமக்குக் கொளந்தை!

('சார் போஸ்ட்' என்ற குரல்; சர்மா வாங்கி வருகிறார்.)

சர்மா: நாயுடுகாரு உனக்குத்தான் போஸ்டு! (கார்டைக் கொடுக்கிறார். நாயுடு கார்டைப் படித்ததுடன் வெட்கப்பட்டுக் கார்டை மறைக்கப் பார்க்கிறார்.)

ரங்க: என்னப்பா கடுதாசி? என்னப்பா விஷயம்?

ஏழு: உனக்கு ஒண்ணுமில்லே போ.

ரங்க: என்னன்னு சொல்லுப்பா. ஏன் இப்படி வெட்கப்படுறே?

சர்மா: நாயுடுகாரு. என்னதான் கார்டு? கொடுங்களேன்.

(கடிதத்தை வாங்கிச் சர்மா படிக்கிறார்: 'அன்புடையீர், தாங்கள் கேட்டிருந்த மதனகாமராஜ லேகியம் தற்சமயம் கைவசமில்லே. தபாலாவுடன் அனுப்பி வைக்கிறோம். 45 நாள் மருந்து உங்களை மீண்டும் வாலிபராக்கும். இப்படிக்கு காயகல்ப வைத்தியசாலை.)

ரங்க: என்னப்பா இது?

ஏழுமலே: பஸ்ஸுக்கு லேட்டாயிடும் வா, கிழவி.

(சர்மா அதிர்ச்சி அடைகிறார்.)

(தொடரும்)

# டெலிராட் வழங்கும் விழாக்கால வாழ்த்துக்கள்!

## இந்தியாவின் மிகச் சிறந்த ரேடியோக்களைத் தயாரிப்போர்.

## ஆர்பி 102

மீடியம் வேவ், பாக்கெட் டிரான்ஸிஸ்டர். நிலையங்களைக் கச்சிதமாகக் கவர்ந்திழுக்கும். 2 பென்லைட் செல்களில் இயங்குகிறது—ரூ. 85



## ஆர்பி 213

சிறிய, ஆனால் சக்திவாய்ந்த 2-பாண்டு போர்ட்டபிள், எழிலான உலோக கிரில் கொண்டது. மீடியம் வேவ் மற்றும் 16 மீ. முதல் 60 மீ. வரையிலுள்ள எல்லா சிற்றலை நிலையங்களைக் கேட்கலாம். 3 பெரிய செல்களில் இயங்குகிறது—ரூ. 185



## ஆர்பி 216

இணையற்ற 2-பாண்டு போர்ட்டபிள். 4 நடுத்தர சைஸ் செல்களில் இயங்குகிறது—ரூ. 165



## ஆர்பி 223

கெட்டக் குத்தலான டயல் கொண்ட, எழில் கொஞ்சும் 2 பாண்டு போர்ட்டபிள். உள்ளே தள்ளக்கூடிய கைப்பிடி கொண்ட மோல்டெட் கேபினெட். 16 மீ. முதல் 60 மீ. வரையுள்ள சிற்றலை நிலையங்களை ஈர்க்கும். 3 பெரிய செல்களில் இயங்குகிறது—ரூ. 165



## ஆர்டி 302 டீலக்ஸ்

3 பாண்டு ஏஸி மெயின்ஸ் ரேடியோ. தொடர்ச்சியான டோன் கண்ட்ரோல். பாலியெஸ்டர் ஃபினிஷ் கொண்ட எழிலான கேபினெட். எக்ஸ்டென்ஷன் ஸ்பீக்கர் மற்றும் ஃபோனோ பிக்-அப்புக்காக சாக்கெட்டுகள்—ரூ. 410



## ஆர்டி 423 எஸ்

4 பாண்டு மெயின்ஸ் ரேடியோ. பிக்-அப் மற்றும் டேப் ரெகார்டருக்காக சாக்கெட்டுகள். பியானோ கீ ஸ்விட்சுகள் கொண்ட விண்வெளி யுக ஸ்டைல்—ரூ. 675





டிடி 3171



டிஸி 5037



ஏபி 02



ஏஆர் 30

எல்லா விலைகளிலும் எக்சைஸ் மற்றும் உள்ளூர் வரிகள் சேர்க்கப்படவில்லை.

**TELERAD**

ஸாராபாய் எலெக்ட்ரானிக் ரிஸர்ச் சென்டரின் தொழில்நுண்ணறிவின் ஆதரவு பெற்றது

Shilpi TR-17A/76 Tam

# புகழ் ஏற்றவர் பாதம் போற்றிடுவோம்



கொத்தமங்கலம் விசு



அஞ்சு நகை பூண்ட கன்னித்தமிழன்னை
அங்கமெல்லாம் எழில் பொங்கிடவே
கொஞ்சமல்ல பல நல்ல நகை பூட்டி
கோலத் தவிசினில் ஏற்றி வைத்தார்
அந்தமில்லாப் புகழ் கொண்டவரை
அழகுத்தமிழ் நடை கண்டவரை
விந்தை மனிதராய் வாழ்ந்தவரை
வித்தகரை வாழ்த்திப் போற்றிடுவோம்

கல்லூரிப்படிப்பை விட்டுப்புட்டு
காந்தியின் பள்ளியில் சேர்ந்தவராம்
கல்லைப்போலிருந்த நடை மாற்றிக்
கனியெனவே நடை தந்தவராம்
பாட்டிலே வீரக் கனல் மூட்டி
பாரதத் தாய்க்குத் தொண்டு செய்த
நாட்டுக் கவிஞரின் பாட்டையெல்லாம்
நாளும் பரப்பிய பெரியவராம்.

சாந்தி மகானின் மண்டபமும் கல்யாண சுந்தரர் மண்டபமும்
கவிஞர் பாரதி மண்டபமும் கல்கியின் பெருமை பேசி நிற்கும்
ஏந்தலை மாந்தர்க்குள் தெய்வமென்று இலக்கியம் தந்த பெரியவராம்
என்றும் குறையாத புகழ்தனை ஏற்றவர் பாதம் போற்றிடுவோம்.

அத்தனை மாதரும் நல்லவர்தான் ஆனாலும் அன்னைக்கு ஈடாமோ?
அத்தனை மொழியும் நல்லதுதான் ஆனாலும் தமிழைப் போலாமோ?
இத்தனை தெரிந்தும் புரியாத பாஷையிலே இசை பாடிவந்தார்
இந்த நிலை மாற்றித் தமிழினிலே இசையைப் பரப்பிய பெரியவராம்

நாடகம் கச்சேரி போகாத நாளுக்கு மனிசர்கூட அப்போ
'ஆடல் பாடலை'ப் படிச்சுப்புட்டு ஆனந்தக் கடலில் மூழ்கிடுவார்.

வால்மீகி முனிவரைக் கண்டதில்லே வேதவியாஸரைக் கண்டதில்லே
நால்வரை, ஆழ்வாரைக் கண்டதில்லே, நல்முனி மூலரைக் கண்டதில்லே
அத்தனை பேரையும் ஓர் உருவில் அறிஞர் ராஜாஜி திரு உருவில்
அன்பர்கள் கண்டு மகிழ்ந்திடவே அருந்துணை புரிந்தவர் கல்கியன்றோ?

குத்தாலத்தில் பல அருவி கொட்டுது சீஸன் மட்டிலும்தான்? — ஆனால்
புத்தமுதத்தமிழ் என்னாளும் கொட்டிய அருவி டி.கே.சி.
எத்தனையோ நல்ல பெரியவரை ஏத்தி மக்கள் மனதினிலே
நித்தமும் நினைக்கச் செய்தவரை நெஞ்சம் உருகித் தண்டனிட்டேன்.

(வேறு)

பார்த்திபன் கனவு தந்த தாங்குறும் கரங்கள் அன்றோ
கார்த்திகைத் திங்கள் தன்னில் கலைக்கிறை யானதன்றோ
பல்லவர் பெருமை யெல்லாம் படித்திடக் கதையாய்ச் சொன்ன
நல்லவர் மறைந்து விட்டார் நாமினி காண்ப தென்றோ?

# மகளிர் பகுதி

## நான் என்ன பண்ணட்டும்?

நான் ஸ்கூட்டர் வாங்கி விட்டேன் என்று என் மனைவிக்கு ஒரே பெருமை. (அல்பத்துக்கு பவிஷு வந்தால் .... என்று பழமொழி சொல்வார்களே, அந்தக் கேஸ் என் அருமை மனைவி!) என் நண்பனிடமிருந்து வாங்கிய 65-வது வருட மாடல் ஸ்கூட்டர் இது. பெரிய மனது பண்ணி அவனே எங்கள் வீட்டில் கொண்டு வந்து விட்டுப் போனான். (எனக்கு இன்னும் ஓட்டத் தெரியாது.)

''பணத்தைப் பற்றிக் கவலைப்படாதேடா. மெதுவாகக் கொடு. வாங்கிக்கிறேன்'' என்று வாய் மலர்ந்தருளினான்.

ஸ்கூட்டர் வந்த பத்தாவது நிமிடமே அக்கம்பக்கத்தில் விசாரிக்க வந்து விட்டார்கள். (என் மனைவியின் வேலை இது. அட்வர்டைசிங் கம்பெனியில் வேலைக்குச் சேர நல்ல தகுதி உண்டு அவளுக்கு)

இதற்குள் என் அருமை பெட்டர்ஹாஃப் மஞ்சள் குங்குமம் கரைத்து வந்து, ஸ்கூட்டருக்கு; மாட்டுக்கு பொட்டு வைப்பது போல், அப்பிக் கொண்டிருந்தாள். வீட்டுக்குப் புது சாம். அதனால் மங்களகரமாய் இருக்காறு மாம். வாகனம் வந்த அமர்க்களத்தில் வீட்டில் சமையலாவது சாப்பாடாவது?

''இன்னிக்கு வேட்டாயிடும், ப்ளீஸ், நீங்க ஹோட்டல்ல சாப்பிட்டு நேக்கும் ஒரு பார்சல் வாங்கி நம்ம ராமுகிட்டே அனுப்புங்கோ போறும். நான் நிதானமா சமையல் பண்ணறேன்'' என்றாள்.

ஒரு வாரமாயிற்று. என் மனைவி தொணப்ப ஆரம்பித்தாள். ''ஏன்னா, நீங்க என்னிக்கு ஓட்டக் கத்துக்கப் போறேள்? என்னிக்கி என்னைப் பின்னாடி ஏத்திண்டு போகப் போறேள்? நான் கிழவியாயிடுவேன் போல இருக்கு. (இப்போது ஜீனத் அம்மன் என்று மனதில் நினைப்பு!) நம்ப பிள்ளை பெரியவனாகி ஸ்கூட்டர் எடுக்கறத்துக்குள்ள கத்துக் கோங்கோ'' என்று நச்சரித்தாள்.

அவள் அறுவையில் இருந்து விடுபடுவதற்காக ஒருநாள் ஆபீஸுக்கு லீவு போட்டு விட்டு, ஒருவனுக்கு 40 ரூபாய் கொடுத்து ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொண்டேன். முதல் ஒரு மாசம், ''நானும் வருவேன் பின்னாடி'' என்னும் என் மனைவியை, 'எல்' போர்டு இருக்கச்சே, பிலியன்ல ஏத்திண்டு போகக் கூடாது. ரெகுலர் லைசென்ஸ் வாங்கினப்புறம் பார்க்கலாம்'' என்று தட்டிக் கழித்தேன். திடீரென்று பார்த்தால், ஒருநாள் ''எல்'' போர்டைக் காணோம். என் மனைவியின் திருவிளையாடல்!

''நான்தான் கழற்றினேன்னா. இனிமேல் என்னை ஏத்திண்டு போகலாம். 'எல்' போர்டு இல்லையே'' என்றாள் சாமர்த்தியமாக. வேறுவழியின்றி அன்று சாயங்காலம் அவளையும் ஏற்றிக் கொண்டு வெளியே கிளம்பினேன். தனியாகப் போனாலே உதறும். சின்னதைப் பார்த்தாலே வண்டி தன்னாலே நின்று விடும். அவ்வளவு ரோட் சென்ஸ் என் டூ வீலருக்கு! இப்போது பிலியனில் மனைவியை ஏற்றிக் கொண்டதும், போலீஸ்காரனைப் பார்க்கும் போதெல்லாம் வண்டி நின்றது. பயம் வண்டிக்கு! கரித்துக் கொட்டிக் கொண்டே ஒவ்வொரு தடவையும் இறங்குவாள். போலீஸைத் தாண்டி வண்டியைத் தள்ளிக்கொண்டு போய் உதைத்து ஸ்டார்ட் செய்து பின் அவளை ஏற்றிக் கொள்வேன். ஒரு தடவை கீழே விழுந்தும் பிலியன் மோகம் அவளை விடவில்லை. ''என்னையும் பின்னாடி வெச்சுண்டு 'பிராக்டீஸ்' பண்ணினால் நல்லது'' என்று விடாப் பிடியாய் ஏறி உட்கார்ந்து விடுவாள். ஒருநாள் குழந்தையையும் கூட்டி வந்து விட்டாள். அதற்குப் பின்தான் உண்மையான தலைவலி ஆரம்பித்தது.

> தையல் மிஷின் வாங்கும்போது அதற்கு மூடி வாங்க முடியாவிட்டால் அந்தப் பிரச்னையை சமாளிக்க ஒரு வழி.
>
> மெஷின் மூடி அளவுக்கு ஓர் அட்டைப் பெட்டியை எடுத்துக் கொண்டு அதன் வெளிப்புறத்தில் சுத்தமான ஒரு துணியை வைத்துத் தைத்து அழகு படுத்துங்கள். அதனால் மெஷின் மூடி வைத்தால் தூசு அடையாமலும் துருப் பிடிக்காமலும் இருக்கும். —அநீதா

''இதோ பாருங்க, கண்ணனையும் வைத்துக் கொண்டு என்னால் உட்கார முடியலே. (யார் இவளை வரச் சொன்னது?) ரொம்ப தூரம் ட்ராவல் பண்ணினா முதுகு வலிக்கிறது. இந்தக் குட்டிப் பிசாசும் ஏதாவது கார், மோட்டார்பைக்கைப் பார்த்தா ஒரேயடியாத் துள்ளறது. பேசாம ஒங்க ஃப்ரெண்ட் கிட்டயே அந்தக் ஸ்கூட்டரைத் திருப்பக் குடுத்துட்டு (இன்னும் பணம் நான் கொடுக்கவில்லை) ஒரு சின்னக் காரா வாங்கிடுங்கோ'' என்று கூறிக் கொண்டிருக்கிறாள். நான் அதிர்ந்து போயிருக்கிறேன். இதிலிருந்து மீள யாராவது வழி சொல்லுங்களேன்!

—சந்திரிகா ரகுநாதன்



## மணக்கும் நெய்!

நெய்யில் இரண்டு மூன்று சிட்டிகை உப்பைப் போட்டு வைத்தால் நெய் எப்போதும் கெடாமல் இருக்கும். வாசனையும் அதிகமாகும்! -சரோஜா ராமச்சந்திரன்



## பீட்ரூட் வடை

**தேவையான பொருட்கள்:** 250 கிராம் கடலைப் பருப்பு; 2 பீட்ரூட்; மூன்று பெரிய வெங்காயம்; 6 பச்சை மிளகாய். வேண்டிய அளவு உப்பு; எண்ணெய் 200 கிராம்.

**செய்முறை:** கடலைப் பருப்பை இரண்டு மணி நேரம் ஊற வைத்துக் களைந்து நன்றாக அரைத்துக் கொள்ளவும். பீட்ரூட்டை நன்றாகத் துருவி அதனுடன் கலந்து கொள்ள வேண்டும். (பருப்பை அரைப்பதற்கு முன்பு அதில் வெங்காயம், மிளகாய், உப்பு இவைகளை கலந்து கொள்ளவும்) ஒரு பாலிதின் பையை கீழே வைத்து அதில் வடைகளைத் தட்டிக் கொள்ளவும். பிறகு எண்ணெயில் போட்டு வடையின் இரண்டு பக்கமும் பொன்னிறமாக வெந்தவுடன் எடுத்து விடவும். -சரோஜா ராமச்சந்திரன்

## வண்ணக் கார்த்திகைத் தீபம்!

கார்த்திகையன்று அகல்விளக்கு, குத்துவிளக்கு என்று எல்லாம் ஏற்றி வைத்து நம் வீட்டு முக வாசலை அலங்கரிக்கிறோம். அந்தத் தீப அலங்காரத்தையே கலை ரசனையோடு செய்தால் காண்பதற்குச் சிறப்பாக இருப்பதோடு புதுமையாகவும் இருக்கும். இதற்கு ரங்கோலி தீபம் என்று சொல்லுவார்கள். இதைச் செய்வது மிக எளிது.

மேலே வரைந்துள்ள மாதிரி பெரியதோர் தாமரைப் பூ வரைந்து கொள்ள வேண்டும். வீட்டின் வாயிலைப் பொறுத்துப் பெரியதாகவோ, சிறியதாகவோ வரையலாம். பின்னர், ஒவ்வொரு தளத்தையும் விதம் விதமான வண்ணக் கோலப் பொடியைக் கொண்டு நிரப்பிப் பின்னர் ஒவ்வொரு தளத்தின் நடுவிலும் ஒரு மண் அகல் விளக்கு ஏற்றி வைத்துப் பாருங்கள். வண்ணப் பொடிகளின் நடுவில் அகல் விளக்கு எரியும் போது வண்ணப் பொடிகள் பிரகாசித்து கோலமே ஓர் அழகிய வண்ண ஓவியமாகத் திகழ்கிறது. எப்பொழுதும் போல வரிசையாக விளக்கு ஏற்றாமல் இம்மாதிரி இந்த ஆண்டு ஓர் மாறுதல் செய்து பாருங்களேன்!

- ஜயா சுப்ரமணியம்

**நா**ங்கள் பாளையங்கோட்டையில் பணியாற்றிக் கொண்டிருந்த போது நடந்த நிகழ்ச்சி இது. நெல்லை மாவட்டத்தில் உள்ள பல்வேறு இலக்கியக் கூட்டங்களிலும் பட்டிமன்றங்களிலும் நானும் என் கணவரும் கலந்துகொண்ட நேரம். என்னுடைய பையன் பிறந்து ஆறேழு மாதங்களாகியும் வாய் பேசாத ஊமையாக இருந்தது மிகவும் மனச் சங்கடமாக இருந்தது. அதிலும் உறவினர்களில் சிலர், 'தாயும் தந்தையும் ஊர் ஊராகச் சென்று வாய் கிழியப் பேசுவதனால் தான், ஊமைப் பையனைப் பிறந்திருக்கிறான்!' என்று ஜாடையாகப் பேசியபோது பெற்ற மனம் துடித்தது.

பையன் பிறந்து எழெட்டு மாதங்களாகியும் பேச்சே வராததால் கணவர் தாங்க முடியாத வேதனை காரணமாக, 'பையன் என்றைக்குப் பேச ஆரம்பிக்கிறானோ, அன்று பெயரிட்டால் போதும்' என்று கூறிப் பெயர் சூட்டு விழா நடத்த மறுத்துவிட்டார்.

பார்ப்பதற்கு நன்றாகக் கொழு கொழுவென்றிருக்கும் பையனுக்குப் பெயர் சூட்டாமல் இருப்பதைக் கண்ட அக்கம் பக்கத்து வீட்டுப் பெண்மணிகள் பையன் 'துரை' போல இருக்கிறான் என்று கூறித் துரை என்றே கூப்பிட ஆரம்பித்துவிட்டனர்.

ஓராண்டு காலம் ஓடியது. ஐந்து வயது வரையில் ஊமையாக இருந்த குமர குருபரர் திருச்செந்தூர் சென்ற பின்பு பேசிய புராண வரலாற்றை உணர்ந்த நாங்கள் அவனுடைய பிறந்த நாளன்று திருச்செந்தூருக்கு எடுத்துச் சென்று மொட்டையும் அடித்துக் கோயில் பிராகாரத்தில் வந்து கொண்டிருந்தோம். கோயில் யானை எதிரில் நின்று பிளறியதைக் கண்ட பையன், ''அம்மா'' என்று அலறி விட்டான். கண்களில் கண்ணீர் பெருக முருகன் சந்நிதியில் வழிபாடு செய்து, ''முருகன்'' என்று பெயரிட்டு மகிழ்ந்தோம். அதிலிருந்து நன்கு பேசும் எங்கள் பையனுக்குப் பக்கத்து வீட்டுப் பெண்மணி முதலில் இட்ட ''துரை'' என்ற பெயரையும் சேர்த்து 'துரைமுருகன்' என்று அழைக்கிறோம். இப்போது ஏழாவது வகுப்புப் படித்து வருகிறான். உண்மையான இந்த நிகழ்ச்சியை என்று நினைத்தாலும் உடம்பெல்லாம் புல்லரிக்கிறது.

—ஆ. சுப்புலட்சுமி கணபதி




படம்: சுப்புலட்சுமி மடியில் துரைமுருகன். >

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி

Sobhagya GR 74-2-Tam.



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்-கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லா-வற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களி-லிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகிய வற்றுக்கான நுட்பமிகமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ள-தோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அன்னியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

## குவாலியர் ரேயான்—

### தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)




பெரிய நடிகர்களால் முடியாத காரியத்தை பெரிய யானை இல்லை; சின்னஞ் சிறு குட்டியே செய்து காட்டி விட்டது!

அதென்ன காரியம்?

நடிப்பு!

தர்மேந்திராவும் ஹேமமாலினியும் கணேஷ் என்னும் யானைக் குட்டியின் நடிப்பைக் கண்டு வியந்து நின்றுவிட்டார்கள். பலன், தங்களுக்குப் பழகிப் பழகிப் புளித்துப்போன நடிப்பைக்கூட மறந்து விட்டார்கள்.

எனவே, படத்தின் கதாநாயகனாகத் திகழ்வது யானைதான். அது பிரதிபலிக்கும் உணர்ச்சிகளைக் காணும்பொழுது, ஓடி ஒளிந்து பாய்ச்சக் காட்டும் பொழுது, கதாநாயகனைக் காட்டிலும் கனகச்சிதமாகச் சண்டையிடும்பொழுது பரவசமுறவே தோன்றும்.

நடிகர்களைக் காட்டிலும் யானையை நடிக்கப் பழக்கியவருக்கு ஒரு சபாஷ் என்றால், அதைப் படத்துக்குள் அடைத்துப் பிரமிக்க வைத்தவருக்கு இரட்டை சபாஷ் போடலாம்.

# சத்தியத்திண்டே நிழலில்



மனிதனை மாறுபடத் தன்மையிலிருந்து தாழ்த்த எத்தனை தீய குணங்கள் உண்டோ, அத்தனையும் பிரபாவிடம் இருந்தன. பிரபா நடத்தை கெட்டவன். குடிகாரன். எல்லாவற்றுக்கும் மேலாகப் பொய்யன். இத்தனைக்கும் மேலாக அவனிடம் குடும்பப் பாசம் இருந்தது!

அவனுக்கு இரு சகோதரர்கள்; ஒருவர் காவல் துறை அதிகாரி; இன்னொருவர் பப்ளிக் பிராசிக்யூடர். அப்பாவோ ரிடையர்டு ஜட்ஜ்; கீதையில் ஊறித் திளைப்பவர்.

இத்தனையும் தன்னுள் அடக்கிக்கொண்ட கதை குடும்பக் கதையாக அல்ல; குற்றக் கதையாக உருவாகிறது. அத்தனை ஸஸ்பென்ஸ்களையும் சிக்கலுக்கும் பொழுது பிரபாதான் எத்தனை உயர்ந்துவிடுகிறான்!

தந்தை தம்மையும் மீறிச் செய்த தவற்றை மறைக்கத் தானே தூக்கு மேடை ஏறும்பொழுது, அவனது அத்தனை தீய குணங்களும் அழிந்து அவனை உயர்த்தி விடுகின்றன.

பிரபா பாத்திரம் ஏற்ற கதிர் தம் நடிப்பால் உயர்வதோடு, உயர்ந்த நடிகர் என்ற கேரள ராஜ்யப் பரிசையும் பெறுகிறார். மற்ற நடிகர்கள் அவருக்குத் துணை நின்று உதவுகிறார்கள். -ரா.வீ.




பரீட்சை தொடங்கி விட்டது என்றால் ஹாஸ்டலில் விடிய விடிய விளக்கு எரியும். மஸ்தான் ஹோட்டலில் தேநீர் ஆறாக ஓடும். சிகரெட் கடை நாயருக்கு ஓய்வேது, உறக்கமேது ? பொடி போடும் 'மைனாரிட்டி' வேறு அவர் கடையை விடாது முற்றுகையிடுவார்களே !

'கம்பைண்ட் ஸ்டடி' என்று சொல்லி ஜோடி ஜோடியாக அரட்டை அடிப்பார்கள் சில மாணவர்கள். வகுப்பில் முன் வரிசையில் உட்காரும் சமர்த்துப் பிள்ளையாண்டான்களைத் தேடிச் சென்று 'முக்கியமான கேள்விகள்' என்ன என்று கண்டு பிடிக்க முயல்வார்கள் சிலர். 'நெர்வஸ் டென்ஷன்' குறைந்து நிம்மதியாகப் பரீட்சை எழுதுவதற்காகச் சினிமாவுக்குச் செல்லும் பிரகஸ்பதிகளும் உண்டு ! என்றும் போல் இழுத்து மூடிக் கொண்டு எட்டு மணி வரையிலும் நிஷ்கவலையாக நித்திரை புரியும் யோகீசுவரர்களைப் பற்றி என்ன சொல்ல ?

பரீட்சை முடிந்தவுடன் தங்கள் பெற்றோரைக் கட்டாய 'க்ஷேத்திராடன'த்துக்கு அனுப்புவார்கள் சில பிள்ளைகள். அருமைப் புதல்வர்களின் வார்த்தைகளைச் சிரமேற்கொண்டு 'புண்ணிய பாரத'த்திலேயே முக்கியமான இடங்களான காசி, கயா, கன்யாகுமரி என்று ஓடும் பெற்றோர்களைப் பார்க்கையில் எனக்கு அனுதாபம் பொங்கும். முன்னேயாவது ரயில்காரன் 'கோ ஆஸ் யூ ப்ளீஸ்', 'டிராவல் ஏஸ் யு லைக்' என்று சில சலுகைகள் தந்து வந்தான். இப்பொழுது முழுச் செலவில் பிரயாணம் செய்தாக வேண்டுமே !

ஆனால் ஆயிரம் பாடுபட்டுப் பரீட்சை பேப்பர்கள் திருத்தப் போயிருக்கும் இடங்களைக் கண்டு பிடிக்கும் திருக் குமாரர்களின் முயற்சிக்காகவாவது பெற்றோர்கள் பல திருத்தலங்களுக்குப் போக வேண்டாமா? இல்லாவிட்டால் 'வாஞ்சை', 'அன்பு' போன்ற வார்த்தைகளுக்கு என்ன அர்த்தம் ?

மார்கழி மாதம். அதிகாலை வேளை. அப்பொழுதுதான் பஜனை கோஷ்டியொன்று வீட்டு வாசல் வழியாகப் போயிற்று. மனதில் சொல்ல முடியாத நிறைவு, இன்பம். சாய்வுநாற்காலியில் படுத்திருந்தவன் சற்றுக் கண்ணயர்ந்தேன். வீட்டு வாசலில் திடீரென 'ஆள் இழுக்கும் ரிக்ஷா' வரவும் கண் விழித்தேன். சமையல் அறையிலிருந்து மனைவியும் ஓடி வந்தாள்.

அப்பாவும் பிள்ளையும் ரிக்ஷாவிலிருந்து இறங்கினார்கள். தயங்கியபடியே பழத் தட்டு ஒன்றைச் சுமந்தபடி பின்னால் வந்தான் தனயன். என்னைக் கண்டவுடன் முகமெல்லாம் பல்லாக 'நீங்கதானே புரொபசர், கமனீய கிருஷ்ணன்?' என்று வினவிய அப்பா, பிள்ளை பக்கம் திரும்பி 'அவரே தாண்டா ! சந்தேகமென்ன? மூஞ்சியிலே வித்வத் பேசறதே ! பழத் தட்டை மாமிகிட்டே தந்து, மாமாவுக்கும் மாமிக்கும் நமஸ்காரம் பண்ணுடா' என்றார். பையனும் விழுந்து கும்பிட்டுப் பயபக்தியுடன் 'அபிவாதயே' சொன்னான் !

''என்ன பண்றது? எல்லாம் 'குழந்தை'யோட கஷ்ட காலம், வேறென்ன? அத்தனை பேப்பரையும் பிரமாதமாக எழுதியிருக்கான். இந்த இங்கிலீஷ் ஒண்ணுதான் காலை வாரிவிட்டது. அவனைக் குறை சொல்லிப் பயனில்லே. அன்னிக்குப் பார்த்து அவனுக்குச் சரியான ஜுரம். இந்த ஒரு பேப்பராலே ஒரு வருஷம் வீணாகப்படாதோன்னோ ? அதான் ஸாரைத் தேடிண்டு வந்தோம்....நீங்க வடமாளா?'' என்று பேசிக் கொண்டே போனார் அப்பா.

''ராங் நம்பர்'' என்றேன்.

''ஸார்வாள் என்ன சொல்றேள் ?''

''நான் கமனீய கிருஷ்ணனில்லே. அவர் ஊருக்குப் போயிருக்கிறார்.''

''எந்த ஊருக்கு ?''

''விஜயவாடாவுக்கு!''

''நான் அங்கிருந்துதானே மெனக்கெட்டு வர்றேன்?''

''என்ன பண்றது ? நீங்க கிளம்பின வேளை சரியில்லே. பூனை கினை குறுக்கே போயிற்றோ?''

''விஜயவாடாவுக்கா போயிருக்கார் ? — கொஞ்சம் அவா விலாசம் தர்றேளா ? குறிச்சுக்கறேன்.''

''ஆஹா, தாராளமாக.''

''நீங்க அவாளுக்கு என்ன வேணும் ?''

''பிரெண்ட்.... அவ்வளவுதான்.''

''ஆசாமி எப்படி? வாங்கற 'டைப்'பா?'' என்று விரலைச் சுண்டியபடி தாழ்ந்த குரலில் கேட்டார்.

''அதெல்லாம் எனக்கு என்ன தெரியும் ?''

''விலாசத்தைக் குறிச்சுக்கவா?''

எல்லோரிடமும் எடுத்த உடனேயே 'சள்'ளென்று விழும் என் நண்பர் அஹம்மது மரக்காயரின் விலாசத்தை எழுதித் தந்தேன். அவர் விஜயவாடாவில் தோல் மண்டி வைத்திருந்தார். என்னிடம் அவருக்கு நிறைய மதிப்பு. அவரை அணுகி, 'புரொபசர் கமனீய கிருஷ்ணன் பணம் வாங்குவாரா?' என்று கேட்டுத் தொலைத்தால் போதும். வேறு வினையே வேண்டாம் ! மரக்காயர் உருதுவும் தமிழும் கலந்த மணிப் பிரவாள மொழியில் பலமாக அர்ச்சனை செய்து விடுவார். பரீட்சாதிகாரிகளைத் தேடிப் போகும் பெற்றோர்களுக்கு அந்தத் தண்டனை யாவது வேண்டாமா ?

எனக்குச் சமர்ப்பிக்கப்பட்ட பழத் தட்டு மீண்டும் பிள்ளையின் கைக்கு ஏறிற்று. ரிக்ஷாவில் ஏறி உட்கார்ந்தவர், 'உங்களுக்கு கெமிஸ்டிரி புரொபசர் சாக்கோர் விலாசம் தெரியுமோ ?' என்று விசாரித்தார்.

''கெமிஸ்டிரி பரீட்சையன்றும் குழந்தைக்குத் திடீர் ஜுரமா?'' என்று கேட்க நினைத்தவன், ஏனோ மௌனம் சாதித்தேன்.

இன்னொரு நாள். வீட்டுத் திண்ணையில் வெற்றுடம்புடன் வீற்றிருந்தேன். சரியான வெய்யில் நேரம்..., ஒரு 'பென்ஸ்' கார் வந்து நின்றது. தலைப்பாகை, கோட்டுடன் இறங்கினார் ஒரு 'கனவான்'. 'சினிமா அப்பா' வாட்டம் இருந்தார். ''பேராசிரியர் கமனீய கிருஷ்ணன் இருக்காரா ?''

''இல்லை.''

''எங்கே போயிருக்கார் ?''

''ஊருக்கு.''

''எந்த ஊருக்கப்பா ?''

''நமக்குத் தெரியாது.''

''நீ யார் ?''

''அவருடைய தவசுப்பிள்ளை.''

''திருநெல்வேலியா? அதான் மூஞ்சியைப் பார்த்தாலே தெரியறதே ! ஐயா என்னிக்கு ஊரிலிருந்து திரும்புவார் ?''

''தெரியாதுங்க.''

''அம்மா இருக்காங்களா ?''

''ஐயாவுக்கு இன்னும் கலியாணமே ஆகலையே !''

''நாசமாய்ப் போச்சு ! ஊருக்குப் போகையிலே பரீட்சை பேப்பரை எல்லாம் எடுத்துப் போயிருக்கிறாரா, இங்கேயே இருக்கா?''

''அது என்னங்க பரீட்சை பேப்பர் ?''

''தற்குறின்னு சரியான தற்குறியாக இருக்கிறயே ! நான் உள்ளே வந்து ஐயா ரூமைப் பார்க்கலாமா ?''

''ஐயையோ ! தெரிஞ்சால் கொன்னுடுவார்.''

''இந்தா, இதைப் பிடி. அவர் வந்தவுடன் இந்த நம்பருக்குக் கொஞ்சம் 'போன்' பண்ணித் தொலை.''

''காசு கீசு வாண்டாமுங்க.''

என்னை ஒரு மாதிரியாகப் பார்த்துவிட்டு வெளியேறினார் அவர். அவர் தலை மறைந்ததும் என் குணசித்திர நடிப்புக்குக் கவி பாடினாள் என் மனைவி !

அரசியல் தலைவர்களின் பெயர்களைச் சொல்லி பயமுறுத்தி மார்க் கேட்பவர்களும் உண்டு. மந்திரி நீக்கொடியனின் பெயரைக் கேட்டால் அனைவரும் நடுநடுங்குவார்கள் என்பது இவர்கள் எண்ணம்.

அப்பப்பா ! பரீட்சைகளை நினைத்தாலே எனக்குத் தலை சுற்றுகிறது! (மாணவர்களைக் காட்டிலும்!) அதோ தபால்காரன் பரீட்சை பார்சல்களுடன் வருகிறான்! பின்னும் எத்தனை பேர் வரப் போகிறார்களோ, என்னென்ன சாகசங்கள் புரிவார்களோ? அதற்குள் நான் மாறு வேஷம் போட்டுக்கொண்டு தலை மறைவாகிவிட வேண்டும் !



# உங்கள் குழந்தையை நடத்தும் அதே வகையில் அவனது சளியையும் அகற்றுங்கள்.

## கனிவுடன். கண்டிப்புடன்.






**ரபெக்ஸ்**

**உங்களைப் போலவே... சளியைப் போக்கும் வலிமையும், திறனும் மிக்கது. இதமும், ஆறுதலும் அளிப்பது.**

ரபெக்ஸில் அடங்கியுள்ள கம்பகமான ஆறு மருந்துப் பொருள்கள், (மென்த்தால், கேம்ஃபர், தைமால், டர்பென்ட்டைன், யூகலிப்டஸ் ஆயில், நட்மெக் ஆயில்) அவனுடைய மூக்கு, தொண்டை, மார்பு மற்றும் முதுகுப் பகுதிகளில் தேய்க்கும்போதே இதமான ஆறுதல் தர வல்லவை. ரபெக்ஸ் அவனது மூக்கடைப்பைத் தளர்த்தி, மார்புச் சளியை அகற்றி, மூச்சு விடுதலை எளிதாக்கும். ரபெக்ஸ் தரும் இதம், உங்களது கனிவு இவற்றினூடே அவனது புன்னகைக்கு அளவே இராது. உடனடியாகவே!

# ரபெக்ஸ்

**தேய்த்தாற்றும் திறனுள்ள களிம்பு. எரிச்சலூட்டாது. ஒட்டாது.**

க்ளோகோடின் போன்ற நவீன மருந்துகள் தயாரிக்கும் Alembic அலெம்பிக் நிறுவனத்திடமிருந்து.

everest/665/ACW-tm.

# பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

## பூர்வ கதை

பல்லவேந்திரர், மாமல்ல நரசிம்ம சக்கரவர்த்தி, வடக்கே படையெடுத்துப் போய் வாதாபிப் புலிகேசியை வென்று திரும்பிய பிறகு அவரது கவனம் தெற்கே சென்றது. பார்த்திபச் சோழன் சில காலமாகக் கப்பம் கட்டவில்லை என்பதால் முகாந்திரம் கேட்டுத் தூது அனுப்பினார். பார்த்திபன் போர்க்களத்திலே பதில் அளிப்பதாகக் கூறி வீர மரணம் அடைந்தான்.

பார்த்திபன் உயிர் பிரியுமுன்னர் ஒரு சிவனடியார் அவனை ரணகளத்திலே தேடி வந்தார். பார்த்திபன் அவரிடம் தன் மகன் விக்கிரமன் வீரனாகத் திகழ வேண்டும் என்றும் என்றேனும் ஒரு நாள் சுதந்திரச் சோழ நாட்டுக்கு அவன் அரசனாக வேண்டும் என்றும் வரம் கேட்டான். சிவனடியார் அவ்வாறே வரம் அளித்தார்.

பார்த்திபன் மகன் விக்கிரமன் புரட்டாசி பௌர்ணமியன்று திருப்பள்ளி மலையில் பறக்கும் சிங்கக் கொடியை இறக்கிப் புலிக் கொடியைப் பறக்கவிடத் தீர்மானித்தான். கொடியைக் காக்கச் சேனையுடன் வருவதாக வாக்களித்த சிற்றப்பன் மாரப்ப பூபதி, விக்கிரமனை எத்தத்துடன் பல்லவ தளபதியிடம் போய் விஷயத்தைக் கூறியும் விட்டான்.

விக்கிரமனின் முயற்சி பலிக்காமல் போயிற்று. அவனைச் சிறைப்படுத்திக் காஞ்சிக்கு அழைத்துப் போனார்கள் பல்லவ வீரர்கள்.

மாமல்லபுரத்தில் திருப்பணி வேலைகளைத் தொடங்கி வைத்த மாமன்னர் நரசிம்மர், செண்பகத் தீவிலிருந்து வந்த தூதர்களைச் சந்தித்துப் பேசினார். அவர்கள், தங்களை ஆண்ட ராஜ வம்சம் சந்ததியின்றி மடிந்ததாகவும் அரசனில்லா நாட்டைப் பல தொல்லைகள் சூழ்வதாகவும் தெரிவித்து, பல்லவ மன்னரை ராஜ பரம்பரையில் வந்த ஒருவரை நாடாள அனுப்புமாறு வேண்டினர்.

காஞ்சிக்குக் கைதாகி வந்த விக்கிரமனை நரசிம்ம சக்கரவர்த்தியின் மகள் குந்தவி தற்செயலாகச் சாலையில் சந்தித்தாள். சங்கிலிகளால் பிணைத்து அழைத்துச் செல்லப்படும் சுந்தர வாலிபனின் வீரத் தோற்றத்தில் கோமகள் மனத்தைப் பறிகொடுத்தாள். அவன் சார்பில் தந்தையிடம் வாதாடினாள். ஆனால் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு எதிராகப் புரட்சி செய்த விக்கிரமனை மாமல்ல நரசிம்மர் மன்னிக்கத் தயாராக இல்லை. தேசப் பிரஷ்டம் செய்துவிட்டார்.

பல நாள் கப்பல் பயணத்துக்குப் பிறகு கரை தென்பட்டது. அந்தத் தீவின் அருகே விக்கிரமனைக் கடலில் இறக்கிவிட்ட கப்பல் தளபதி, அவன் பற்றிக் கொள்ள ஒரு மரக் கட்டையையும் போட்டார். அதன் உதவியுடன் மிதந்தும், நீந்தியும் கரை சேர்ந்த விக்கிரமனைச் செண்பகத் தீவுவாசிகள் மன்னராக்கி மகிழ்ந்தனர்!

மறைந்த மன்னன் பார்த்திபனின் தேவி அருள்மொழியை அடிக்கடி ஒரு சிவனடியார் வந்து பார்ப்பதாகவும் அவர்தாம் விக்கிரமனையும் பல்லவப் பேரரசுக்கு எதிராகப் புரட்சி செய்யுமாறு தூண்டியிருக்க வேண்டும் என்றும் கோமகள் குந்தவி கேள்விப்பட்டாள். சிவனடியாரின் தாடியைப் பிடித்து இழுத்து வந்து தன் தகப்பனார் முன் நிறுத்தினால் அவருக்கு விக்கிரமன் மீதுள்ள கோபம் தணியும் எனக் கருதி அப்படியே சபதம் எடுத்துக் கொண்டாள்.

அருள்மொழித் தேவி காவிரி ஆற்றின் மத்தியிலிருந்த ஒரு தீவில் அமைந்த வசந்த மாளிகையில் வசித்து வந்தாள். தீவுக்குப் படகோட்டிச் செல்வான் பொன்னன். அவனும் அவன் மனைவி வள்ளியும் காவிரிக் கரையில் ஒரு குடிசையில் வசித்து வந்தனர். ஒருநாள் நரசிம்ம பல்லவர் அங்கு வந்து பொன்னனை அழைத்தார். தம் மகள் குந்தவி சீக்கிரமே அருள்மொழி ராணியைப் பார்க்க வரலாம் என்றும் ஜாக்கிரதையாகப் படகோட்டிச் செல்ல வேண்டும் என்றும் ஆக்ஞாபித்தார். பொன்னன் பயபக்தியுடன் நெளிந்து குழைந்து உத்தரவை ஏற்றான்.

பகை அரசன் முன் இப்படிப் பணிந்து போனதற்காக வள்ளி அவனைக் கேலி செய்து சண்டையும் பிடித்தாள். இச்சமயம் விக்கிரமனை முன்பு ஏமாற்றிய சிற்றப்பன் மாரப்ப பூபதி அவர்கள் குடிசையை நாடி வந்து குதிரையை விட்டுக் கீழிறங்கினான்.

## அத்தியாயம் 19

## மாரப்பனின் மனோரதம்

**மா**ரப்ப பூபதி பொன்னனின் குடிசைக் கதவைத் திறந்தபோது, வள்ளி பின்வருமாறு சொல்லிக் கொண்டிருந்தாள் :

''மானம் போன பிறகு உயிரை வைத்துக் கொண்டு இருந்து என்ன பிரயோசனம் ? நம்ம தேசத்துக்கும் நம்ம மகாராஜாவுக்கும் துரோகம் செய்துவிட்டு அப்புறம் பிராணனை வைத்துக் கொண்டு இருக்கிறதாயிருந்தால், உனக்கும் அந்தக் கேடுகெட்ட மாரப்பனுக்கும் என்ன வித்தியாசம்?''

இதை மாரப்பன் கேட்டதும் அவனுடைய முகம் கோபத்தினால் சிவந்தது. வாசற்படியிலேயே சற்று நேரம் அசையாமல் நின்றான். பிறகு என்ன தோன்றிற்றோ என்னவோ, அவனுடைய முகத்தில் ஒருவிதமான மலர்ச்சி உண்டாயிற்று. புன்னகையுடன், ''என்ன, வள்ளி! என் தலை

யையும் சேர்த்து உருட்டுகிறாயே ? என்ன சமாசாரம்? என்னோடு பொன்னனையும் சேர்க்கும்படியாக அவன் அப்படி என்ன பாதகம் செய்து விட்டான் !'' என்றான்.

அடுப்பு வேலையைப் பார்த்தபடி பொன்னன்தான் வருகிறான் என்று நினைத்துக் கொண்டு தலை நிமிராமல் முதலில் பேசிய வள்ளி வேற்றுக் குரலைக் கேட்டதும் திடுக்கிட்டுப் பார்த்தாள். மாரப்பன் என்று அறிந்ததும், அவளுக்குக் கொஞ்சம் திகைப்பாய்த்தான் இருந்தது. ஆனாலும், சிக்கிரத்தில் சமாளித்துக் கொண்டு, '' உங்கள் தலையை உருட்டுவதற்கு என்னால் முடியுமா, ஐயா ? அதற்கு எந்த உண்மையான வீரம் படைத்த ஆண் பிள்ளை பிறந்திருக்கிறானோ ?'' என்றாள்.

இதில் பிற்பகுதியை மெல்லிய குரலில் சொன்னபடியால் மாரப்பன் காதில் நன்றாக விழவில்லை.

'' என்ன சொன்னாய், வள்ளி ?'' என்றான்.

இதற்குள் பொன்னன் வெளியிலிருந்து வரவே, மாரப்பன் அவனைப் பார்த்து, ''பொன்னா ! உன்னோடு ஒரு சமாச்சாரம் பேச வேண்டும், வா'' என்று கூறி அவனை வெளியில் அழைத்துப் போனான்.

இருவரும் நதிக் கரைக்குச் சென்று மரத்தடியில் உட்கார்ந்தார்கள்.

''பொன்னா ! நீ எனக்கு ஒரு பெரிய உபகாரம் செய்திருக்கிறாய். அதற்காக என்றைக்காவது ஒரு நாள் நான் உனக்கு நன்றி செலுத்தியாக வேண்டும்'' என்றான் மாரப்பன்.

''நானா, ஐயா ? உங்களுக்கா ? அப்படி ஒன்றும் செய்ததாகத் தெரியவில்லையே ?''

'' உனக்குத் தெரியாமலே செய்திருக்கிறாய், பொன்னா !''

'' ஐயையோ ! அப்படியானால் அதை வள்ளியிடம் மட்டும் சொல்லி விடாதீர்கள்! அவள் என்னை இலேசில் விடமாட்டாள் !'' என்றான், பொன்னன்.

மாரப்பன் சிரித்துக் கொண்டே: '' அதுதான் பொன்னா ! அதுதான் ! வள்ளியை நீ கல்யாணம் செய்துகொண்டாயே, அதுதான் நீ எனக்குச் செய்த பெரிய உபகாரம். ஒரு காலத்தில் அவளை நான் கல்யாணம் செய்து கொள்ளலாம் என்ற சபலம் இருந்தது. அப்படி நடந்திருந்தால், என்னை என்ன பாடுபடுத்தியிருப்பாளோ?''

''ஆமாம், எஜமான், ஆமாம் ! தங்களுடைய சாதுக் குணத்துக்கும் வள்ளியின் சண்டைக் குணத்துக்கும்



ஒத்துக் கொள்ளாதுதான். சண்டை என்று கேட்டாலே தங்களுக்குச் சுரம் வந்துவிடும் என்பதுதான் உலகமெல்லாம் அறிந்த விஷயமாயிற்றே!'' என்றான் பொன்னன்.

''என்ன சொன்னாய்?'' என்று மாரப்பன் கத்தியை உருவினான்.

''ஓகோ! கத்திகூடக் கொண்டு வந்திருக்கிறீர்களா? நிஜக் கத்திதானே? கொஞ்சம் இருங்கள். வள்ளியைக் கூப்பிடுகிறேன். உங்கள் உறையில் உள்ள கத்தி நிஜக் கத்தியல்ல — மரக் கத்தி என்று அவள் ரொம்ப நாளாய்ச் சொல்லிக் கொண்டிருக்கிறாள்!'' என்று கூறி விட்டுப் பொன்னன் எழுந்திருந்தான்.

'' மாரப்பன் கத்தியைப் பக்கத்தில் தரையில் வைத்துவிட்டு, ''வேண்டாம், பொன்னா! உட்கார். புருஷர்களின் காரியத்தில் பெண் பிள்ளைகளைக் கூப்பிடக் கூடாது. அவர்கள் வந்தால் விபரீதந்தான் பார்! விக்கிரமனைச் சோழ தேசத்துக்கு ராஜாவாக்க நாம் பெரு முயற்சி செய்தோமே? அது பலித்ததா? நமது ஆலோசனைகளில் அருள்மொழி ராணியைச் சேர்த்துக் கொண்டதனால்தானே, காரியம் கெட்டுப் போயிற்று?'' என்றான்.

''அப்படியா? மகாராணி என்ன செய்தார்கள், காரியத்தைக் கெடுப்பதற்கு? அவர்தான் இங்கே இளவரசரையும் கிளப்பி விட்டு விட்டு, அங்கே அச்சுதவர்மரிடமும் போய்ச் சொல்லிக் கொடுத்தாரா? பிள்ளை மேல் அவருக்கு என்ன அவ்வளவு விரோதம்?''

''இல்லை, பொன்னா! ராணி யாரோ ஒரு சிவனடியாரை நம்பி, அவரிடம் எல்லாவற்றையும் சொல்லி விட்டாள்.



அந்த வேஷதாரியை நம்ப வேண்டாம் என்று நான் எவ்வளவோ சொன்னேன். கேட்டால்தானே? உண்மையில் அந்தக் கபட சந்நியாசி பல்லவ சக்கரவர்த்தியின் ஒற்றன்; எல்லாவற்றையும் போய்ச் சொல்லிவிட்டான்!''

இதைக் கேட்டதும் பொன்னனுக்கு ஏற்கனவே அந்தச் சிவனடியார் மேல் ஏற்பட்டிருந்த சந்தேகம் கொஞ்சம் பலப்பட்டது. 'ஒரு வேளை அவருடைய வேலையாகவே இருந்தாலும் இருக்கலாம். நாம் அநாவசியமாய் மாரப்ப பூபதியைச் சந்தேகித்தோமே' என்று சிறிது வெட்கமடைந்தான்.

''சிவனடியாராயிருந்தாலும் சரி; யாராயிருந்தாலும் சரி; என்றைக்காவது ஒரு நாள் உண்மை வெளியாகப் போகிறது. அப்போது, துரோகம் செய்தவனை...'' என்று பொன்னன் பல்லை நரநரவென்று கடித்தவண்ணம், மாரப்பனுக்குப் பக்கத்தில் தரையில் கிடந்த கத்தியைச் சட்டென்று எடுத்து ஒரு சுழற்றுச் சுழற்றி, அருகேயிருந்த புங்க மரத்தில் ஒரு போடு போட்டான். வைரம் பாய்ந்த அந்த அடி மரத்தில் கத்தி மிக ஆழமாய்ப் பதிந்தது!

மாரப்பனுடைய உடம்பு பாதாதிகேசம் ஒரு கண நேரம் வெடவெடவென்று நடுங்கிற்று. எனினும் பொன்னன் தன்னைத் திரும்பிப் பார்ப்பதற்குள் ஒருவாறு சமாளித்துக் கொண்டான்.

''பழைய கதையை இனிமேல் மறந்து விடு, பொன்னா. இளவரசர் என்னவோ இனிமேல் திரும்பி வரப் போவதில்லை. நம்முடைய காரியத்தை நாம் பார்க்க வேண்டியதுதான்.''

''நம்முடைய காரியம் என்ன இருக்கிறது இனிமேல்? எல்லாந்தான் போய்விட்டதே!''

''எல்லாம் போய்விடவில்லை. நானும் நீயும் இருக்கிற வரையில் எல்லாம் போய் விடாது. ஆனால் யுக்தியை மாற்றிக் கொள்ள வேண்டும். சண்டையினால் முடியாத காரியத்தைச் சமாதானத்தினால் முடித்துக் கொள்ள வேண்டும். நீ கெட்டிக்காரன் பொன்னா! நான் எல்லாம் கேள்விப்பட்டேன், சக்கரவர்த்தி இந்த வழியாகப் போனபோது உன்னை அழைத்துப் பேசினாராம். நீயும் அவருக்குப் பணிந்தாயாம். இதுதான் சரியான யுக்தி. பெண் பிள்ளை பேச்சைக் கேட்காதே. வள்ளி ஏதாவது உளறிக் கொண்டுதான் இருப்பாள். நீ மாத்திரம் எனக்குக் கொஞ்சம் ஒத்தாசை செய்தாயானால், சோழ நாட்டைக் காப்பாற்றலாம். விக்கிரமன் ஒரு வேளை திரும்பி வந்தால் அவனிடம் இராஜ்யத்தை ஒப்புவிக்கலாம். இராஜ்யம் அடியோடு கையை விட்டுப் போய்விட்டால் அப்புறம் திரும்பி வராதல்லவா?''

ஆரம்பத்தில் மாரப்பனின் பேச்சு பொன்னனுக்கு வேப்பங்காயாக இருந்தது. விக்கிரமனுக்கு இராஜ்யத்தைத் திருப்பிக் கொடுப்பது பற்றி பிரஸ்தாபித்ததும், பழைய சேனாதிபதி சொல்வதில் ஏதேனும் உண்மை இருக்குமோ?— என்று பொன்னனுக்கு யோசனை உண்டாயிற்று.

''நான் என்ன ஒத்தாசை செய்ய முடியும்?'' என்று அவன் கேட்டான்.

''பிரமாதமாக ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. சக்கரவர்த்தியின் மகள் குந்தவி தேவி, அருள்மொழி ராணியைப் பார்க்க வரப் போவதாகப் பிரஸ்தாபம். நீதானே படகு விடுவாய்? சந்தர்ப்பம் நேரும்போது எல்லாம் என்னைப் பற்றிப் பேசு. உனக்குத்தான் தெரியுமே, பொன்னா! வள்ளியின் பாட்டன் ஜோசியம் சொல்லியிருக்கிறான் அல்லவா? எல்லாம் அந்த ஜோசியம் பலிப்பதற்கு ஏற்றபடியே நடந்து வருகிறது. இல்லாவிட்டால், குந்தவி தேவி இப்போது இங்கே வர வேண்டிய காரணமேயில்லை, பார்!'' என்றான்.

குந்தவி தேவியை விக்கிரமன் மணந்து கொள்ள வேண்டுமென்னும் அருள்மொழி ராணியின் பழைய விருப்பம் பொன்னனுக்கு ஞாபகம் இருந்தது. எனவே, மாரப்பன் மேற்கண்டவாறு பேசியதும், பொன்னனுக்கு அவனிடமிருந்த வெறுப்பெல்லாம் திரும்பி வந்துவிட்டது; உள்ளுக்குள் கோபம் பொங்கிற்று. ஆயினும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், ''அதற்கென்ன? சமயம் நேர்ந்தால் கட்டாயம் உங்களைப் பற்றிக் குந்தவிதேவியிடம் பேசுகிறேன்'' என்றான்.

''நீ செய்யும் உதவியை மறக்கமாட்டேன், பொன்னா! சக்கரவர்த்தி என்னைக் கூப்பிட்டிருக்கிறார். நாளைக்குப் பார்க்கப் போகிறேன். சேனாதிபதி வேலையை இப்போது எனக்குக் கொடுக்கப் போகிறார். பிறகு, சோழ இராஜ்யமே என் கைக்குள் வருவதற்கு அதிக நாளாகாது. அப்போது உன்னைக் கவனித்துக் கொள்வேன்!'' என்று சொல்லிக் கொண்டே மாரப்பன் குதிரை மீதேறி அதைத் தட்டி விட்டான்.

(தொடரும்)

---



பாபு: கதாநாயகிக்குப் பால் வடியும் முகம் என்பது ரொம்ப உண்மை.
கோபு: எதனால் சொல்கிறாய்?
பாபு: படத்தில் சதா அவளை ஒரு பூனை சுற்றுகிறது.

— லலிதா செல்லப்பா

**மிகக் குறைந்த பிரதிகளே கைவசமுள்ளன. உங்கள் தேவைக்கு முந்துங்கள்.**

கல்கி ஓவியர் **வினு** வரைந்த

## ஸ்ரீ ஜய ஹனுமான் வண்ணப் படம்

**பூஜை முறைப் புத்தகத்துடன் வெளிவந்த இரண்டாம் பதிப்பு வண்ணப்படத்திற்கு நாடெங்கிலும் மக்களின் அமோக வரவேற்பு**

எங்கள் இரண்டாம் பதிப்பையும் பல்லாயிரக்கணக்கான அன்பர்கள் வாங்கிப் **பூஜித்து** நல்ல பலன் அடைந்திருக்கிறார்கள்; தகவல்கள் வந்த வண்ணமாக இருக்கின்றன. ஜகத்குரு ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களால் அருளாசிகள் வழங்கப்பெற்றது. ஆதாரம்: சேங்காலிபுரம் ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் ஜயமங்களத் தோத்திரம். இதை ஒரு மண்டலம் (45 நாட்கள்) பூஜித்தால் திருமணம், உத்தியோகம், வியாபாரம், கல்வியில் வெற்றி போன்ற நினைத்த காரியங்கள் நிச்சயம் கைகூடும்.

ஓவியர் **வினு** வரைந்த

## அருள்பொழியும் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் வண்ணப் படமும் அமோக விற்பனை



மக்களின் மகத்தான வரவேற்பு. ஒவ்வொரு இல்லத்தின் பூஜை அறையிலும் இருக்க வேண்டிய பொக்கிஷம்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளால் அங்கீகாரம் செய்யப்பட்ட படம்.

இன்றே தேவைக்குத் தபால் செலவுடன் M. O. செய்யக் கோருகிறோம்.

விலை விவரம்: ஸ்ரீ ஜய ஹனுமான் படம்: 13½ × 20" ரூ. 5.00
தமிழும், ஸம்ஸ்கிருதமும் சேர்ந்த (பூஜைப் புத்தகத்துடன்)
பாக்கிங் உள்படப் பதிவுத் தபால் செலவு ரூ. 4.00 தனி

ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் படம்: 13½ × 20" ரூ. 5.00, 9½ × 15" ரூ. 3.00
பாக்கிங் உள்படப் பதிவுத் தபால் செலவு ரூ. 3.50 தனி

ஏஜெண்டுகள் தேவை
(50 பிரதிகள் வாங்குபவர்களுக்கு 20% கமிஷன் உண்டு)

உரிமையாளர்: **ஸ்ரீமதி சரஸ்வதி வெங்கட்ராமன்**, W/o ஓவியர் வினு (கல்கி) 2, வேலாயுத முதலித் தெரு, (மாடி) நுங்கம்பாக்கம், சென்னை - 600034 (வள்ளுவர் கோட்டம், டாக்கீஸ் நிலையம் அருகில்)

---

# மாயவரம் பைனான்ஷியல் கார்ப்பொரேஷன்
## லிமிடெட்

பதிவு அலுவலகம்: **13-H, கச்சேரி ரோடு, மாயவரம் - 609001**

**31-3-1976 முடிய**

| | |
|---|---|
| 1. அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 5 லட்சம் |
| 2. செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வுகள் | ரூ. 5.5 லட்சம் |
| 3. நடைபெறும் சீட்டுகளின் மதிப்பு | ரூ. 8 கோடிக்கு மேல் |

**கிளை அலுவலகங்கள்**

மாயவரம், காரைக்கால், பாண்டிச்சேரி
திருப்பாப்புலியூர், கும்பகோணம், தஞ்சாவூர்
சிதம்பரம், சென்னை, காஞ்சீபுரம்

**"உயர்துகை ஏலச் சீட்டு நடத்துபவர்கள்."**

மாயவரம்
27-5-76

**R. கல்யாணசுந்தரம்**
மானேஜிங் டைரெக்டர்




# கணங்களும் யுகங்களும்!

□ அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1976-முடிவுகள் குறித்துக் கருத்து வேறுபாடுகள் இருக்கக்கூடும். அத்தகைய கருத்துக்களுக்கு அநேகமாக மதிப்புக் கொடுப்பது கிடையாது. இருந்தும்கூட, அழகாபுரி அழகப்பன் அவர்கள் எழுதிய முதற் பரிசுக் கதை 'கணங்களும் யுகங்களும்' குறித்து பம்பாயிலிருந்து வெளிவரும் ஃபெமினா ஆங்கில இதழ் (24–9–76) வாசகி ஒருவர் கருத்துத் தெரிவித்திருக்கிறார். இதைத் தங்கள் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன், கல்கி வாசகன் என்ற ஹோதாவில்! 'From you to us' என்ற பகுதியில் Preserving the Savithiri Image என்ற தலைப்பில் அகமதாபாத்தைச் சேர்ந்த வசந்தா என்ற சகோதரி எழுதுகிறார் :

(Extract) Recently I read a story in a popular Tamil magazine of a 14 year old girl who was raped by a respectable middle aged man. As a result She sacrifices her whole life for the man. She imagines that she has found her true love in him. This stupid and unrealistic story was given the first prize and several readers appreciated it. Magazine like these propogate the idea that women do not have any identity of their own apart from that of their family.

இக்கடிதத்தின் சில பகுதிகள் — என்னைப் போன்ற கல்கி வாசகர்களுக்கு நியாயமான ஆட்சேபமாகப் படுவதால், தங்களிடமிருந்தோ, கதை ஆசிரியரிடமிருந்தோ ஏதேனும் விளக்கம் கிடைக்கக்கூடும் என்ற நம்பிக்கையில் இதனைத் தங்கள் பார்வைக்கு வைக்கின்றேன்.

சென்னை — 75
23–9–76 வி. பானு

கதையை இன்னொரு தடவை படித்துப் பார்க்குமாறு ஃபெமினா வாசகி வசந்தாவையும் அன்பர் பானு அவர்களையும் கேட்டுக் கொள்கிறோம். அமதாபாத் வசந்தா கதையைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை அல்லது அவருக்கு ஆங்கிலம் தெரியவில்லை என்ற முடிவுக்குத்தான் நாம் வரவேண்டியிருக்கிறது. இல்லாத போனால் Rape என்ற வார்த்தையைப் பயன்படுத்தியிருப்பாரா?

கதையில் தன்னை முத்தையா பலாத்காரம் செய்யவில்லை என்பதை ரமா தெளிவாகவே குறிப்பிடுகிறாள்.

She imagines she has found her true love என்பதும் தவறு. ரமா முத்தையாவைக் காதலிப்பதில் கற்பனை ஏதுமில்லை. அது மெய்யான தூய காதலாக மலர்ந்தது என்பது கதையில் தெளிவாக்கப்பட்டிருக்கிறது.

Magazines like these propogate the idea that women do not have an identity of their own "apart from that of their family என்பது முற்றிலும் தவறு. கல்கியை ஆரம்பகாலத்திலிருந்து படித்து வருபவர்கள் இப்பத்திரிகை பெண் குலத்தின் உயர்வுக்காக ஆற்றி வரும் தொண்டினை நன்கு அறிவார்கள். முதல் பரிசுக் கதையிலும்கூட ரமா தனக்கென்று ஒரு Identity ஐ அழுத்தமாக ஏற்படுத்திக் கொள்கிறாள்.

கதை Unrealistic என்பது மற்றொரு குற்றச்சாட்டு. எதை Unreal எனக் கருதுகிறார் வசந்தா? ஒருவேளை ரமா முத்தையாவைக் கணவனாகவே வரித்து கடைசி வரை அவனுக்கு உண்மையாக இருக்கிறாளே, அதையா? அப்படி அவள் இருந்திருக்கக் கூடாது என்பது சகோதரி வசந்தாவின் கருத்தா? Realism என்பது சாக்கடையில் மட்டும் இல்லை. தெளிந்த நீரோடையிலும் உண்டு. கடத்தல் மன்னர்கள் மட்டும்தான் ரியல் என்பதில்லை. அண்ணல் காந்தி அடிகளும் ரியல்தான். சிவப்பு விளக்குப் பகுதிகளில் உள்ள சில பெண்கள் மட்டும்தான் ரியல் என்பதில்லை. பாரத நாட்டில் உள்ள லட்சோப லட்சம் கற்பரசிகள் ரியல்தான். என்னதான் மேனாட்டு மோகம் நம்மைப் பிடித்து ஆட்டினாலும் நமது பெண்மணிகளில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் கற்பு விஷயத்தில் இன்னமும் (நல்லவேளையாக) Conservative தான். எனவே, இந்தக் கதையில் ரியலிஸம் இல்லை என்பதை ஏற்கவே முடியாது.

Several readers appreciated it என்று எழுதுகிறார் வசந்தா, ஏதோ கல்கி வாசகர்களிடம் கணக்கெடுத்துப் பார்த்தாற்போல. முதல் பரிசுக் கதை பிரசுரமான பிறகு நமது காரியாலயத்துக்கு வந்த பாராட்டுக் கடிதங்கள் innumerable; several அல்ல.

இவ்வளவு சொன்ன பிறகு இந்தக் கதை Stupid ஆ அல்லது இதைப் பற்றி ஃபெமினாவில் வெளியான சகோதரி வசந்தாவின் விமரிசனம் stupid ஆ என்பதை வாசகர்கள் முடிவுக்கு விட்டுவிடலாம்.

கதையைப் பற்றி வசந்தா எழுதியதில் ஒரு விஷயம் மட்டுமே உண்மை. அந்த ஓர் உண்மையேனும் சொன்னதற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம். அந்த உண்மை இக்கதை முதல் பரிசு பெற்றது என்பதுதான்.

செப்டம்பர் மாதம் வந்த மேற்படி கடிதத்தை இதுவரை பிரசுரிக்காமலேயே வைத்திருந்தோம். ஆனால் தமிழில் வெளிவரும் 'புதிய அலை' என்ற பத்திரிகையிலும் சமீபத்திய இதழில் கணங்களும் யுகங்களும் தாக்குதலுக்கு உள்ளாகி இருக்கும்போது பதில் கூறாதிருப்பது முறையாகத் தோன்றவில்லை. ஃபெமினா கடிதத்துக்கு மட்டுமின்றி 'புதிய அலை' கட்டுரைக்கும் கூட மேற்படி பதிலே பொருந்தும்.

— ஆசிரியர்

# நீலக் குழந்தைகள்

டாக்டரின் டயரி!

இரண்டு மாதச் சிசுவைக் கையிலேந்தி வந்த தாயார் கூறினள்: ''சென்ற வாரத்திலிருந்து குழந்தைக்கு இருமல் இருந்து வருகிறது. நெஞ்சிலும் கபம் கட்டியிருக்கிறது. காய்ச்சலும் இருந்து கொண்டிருக்கிறது. நேற்று இரவு முதல் குழந்தையின் கால்களிலும் கைகளிலும் நீலம் பாரித்திருக்கிறது. இன்று காலையில்தான் கை, கால்கள் நீலமாக இருப்பது நன்ருகத் தெரிந்தது. இதோ, பாருங்கள்...''

குழந்தையை ஸ்டெதாஸ்கோப் வைத்துப் பரிசோதித்துவிட்டு உடனடியாக எக்ஸ்-ரே படமும் இ.ஸி.ஜி.யும் எடுக்க ஏற்பாடு செய்ததுடன் தாமதமின்றி அரசினர் பொது மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லும்படியும் வற்புறுத்திக் கூறினேன். அந்தப் பெண்ணுக்கு மருத்துவ மனை என்றதும் பயம் ஏற்பட்டதில் வியப்பில்லை. குழந்தையை மருத்துவ மனை

சஸ்திர சிகிச்சைக்குப் பிறகு சிசுவைப் பிராணவாயுக் கூடாரத்துக்குள் வைத்துக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் காக்கும் நர்ஸ்.



யில் சேர்க்க வேண்டும் என்ருல், நிலைமை ஏதோ அபாயகரமாக இருக்க வேண்டும் என்ற கவலை ஏற்படத்தானே செய்யும்?

**''உண்மையிலேயே குழந்தையின் நிலைமை அபாயகரமானதுதானு? குழந்தைக்கு அப்படி என்ன வியாதி?''**

''பிறவியிலேயே இதயக் கோளாறுடன் பிறந்த குழந்தை அது. அதனை 'ப்ளு பேபி' (Blue Baby) எனக் குறிப்பிடுகிறேம்.''

**''இதயத்தில் என்ன கோளாறு?''**

''உடலின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் அசுத்த இரத்தம் இதயத்தின் வலது பகுதிக்கு வந்து சேரும். வலது பக்கத்திலிருந்து குழாய் வழியே நுரையீரலுக்குச் செலுத்தப்படும் அசுத்த இரத்தம், நுரையீரலில் பிராண வாயுவுடன் கலந்து சுத்தம் செய்யப்பட்டுப் பிறகு தமனி என்னும் பெரிய குழாய் மூலம் இதயத்தின் இடது பக்கத்துக்கு வந்து சேரும். பிறகு உடலின் பல உறுப்புக்களுக்கும் அந்த சுத்த இரத்தம் செலுத்தப்படுகிறது. இதயத்தின் வலது புறம் உள்ள அசுத்த இரத்தமும் இடதுபுறம் உள்ள நல்ல இரத்தமும் ஒன்ருேடொன்று கலந்து விடாமலிருக்க இடையே ஒரு குறுக்குச் சுவர் (ஸெப்டம்) உண்டு. நுரையீரலுக்குச் செல்லும் இரத்தக் குழாய்கள் போதிய வளர்ச்சி பெறு விடிலோ அல்லது அசுத்த இரத்தம் வந்து சேருமிடம் வளர்ச்சி பெறு விட்டாலோ இரத்தம் தூய்மை அடைய வழியில்லை. அந்த அசுத்த இரத்தம் ஆரோக்கியமான இதயத்தில் இருக்கக் கூடாத ஒரு திறப்பின் வழியே (Intra cardiec shunt) இடது பக்கம் சென்று உடலின் பல்வேறு பகுதிகளுக்கும் செல்கிறது. அதன் விளைவாகவே உடல் நீலமாகிவிடுகிறது.''

**''உடல் முழுவதுமே நீலமாகி விடுமா?''**

''முழுவதும் நீலமாகி விடுவதும் உண்டு. அல்லது கை, கால்கள் போன்ற சில உறுப்புக்கள் மட்டும் நீலமாகும். குழந்தை அழும் பொழுதோ, ஓடி விளையாடினலோ நீல வண்ணம் நன்ருகக் கண்ணுக்குப் புலனுகும்.''

**''இதயத்தின் எந்தப் பகுதி எவ்விதத்தில் பழுதடைந்துள்ளது என்பதை மருத்துவர்கள் எப்படிக் கண்டு பிடிக்கிருர்கள்? எக்ஸ்-ரே மூலம் கண்டறிய முடியுமா?''**

''எக்ஸ்-ரே, இ. ஸி. ஜி. மூலம் ஓரளவு கண்டறியலாம். ஆனல் எங்கே திறப்பு உள்ளது, எந்த இரத்தக் குழாய் சரிவர வேலை செய்யவில்லை என்பதைத் திட்டவட்டமாகக் கண்டறிய, 'ஸினி ஏஞ்சியோ கார்டியோகிராஃபி' உதவுகிறது. குறிப்பிட்ட குழந்தையின் கையிலோ—காலிலோ உள்ள இரத்தக் குழாய் மூலம் இதயத்துக்குள் ஒரு குழாயை (Cardiac Catheter) செலுத்தி ஒருவித வண்ணத்தின் உதவியால் சினிமாப் படம் எடுக்கிற மாதிரி இதயத்தை எக்ஸ்-ரே சினிமாப் படம் எடுக்கலாம். அந்தப் படத்தின் 'நெகடிவ்' விலிருந்து பிரிண்ட் தயாரித்துத் திரைப் படம் போட்டுக் காட்டுகிற மாதிரி அதைத் திரையில் போட்டுப் பார்த்து எங்கே கோளாறு ஏற்பட்டுள்ளது என்றறியலாம்.''

**''இதயம் மீண்டும் சரியாக இயங்க என்ன சிகிச்சை அளிக்கப் பெறுகிறது?''**

''இதயத்திலிருந்து நுரையீரலுக்கு இரத்தம் செல்லும் வகையில் ஒரு செயற்கைக்

குழாயைப் பொருத்தி இரத்த ஓட்டம் ஏற்படும்படி செய்வது முதல் கட்டம். இது உடனடி சிகிச்சை. தடுப்பு அல்லது அடைப்பு நிரந்தரமாக நீங்க ரண சிகிச்சை செய்வது இரண்டாவது கட்டம். சென்னையில் அரசினர் பொது மருத்துவ மனையிலும் பெரம்பூர் ரயில்வே மருத்துவ மனையிலும் வேலூர் மருத்துவ மனையிலும் இந்த ரண சிகிச்சை அளிக்க வசதிகள் உள்ளன. உரிய காலத்தில் சிகிச்சை அளிக்கப்பட்டால் இயல்பான ஆயுட்காலம் வரை வாழ முடியும்.''

**''பிறவியிலேயே குழந்தைக்கு இந்த இதயக் கோளாறு ஏற்படுகிறது என்கிறீர்கள். இது ஏற்படாமல் தடுக்க என்ன வழி?''**

''நெருங்கிய உறவினர்களிடையே திருமணம் செய்வது தவிர்க்கப்பட வேண்டும். உறவினர்களுள் ஒருவருக்கு இதயக் கோளாறு இருந்தாலும் குழந்தைக்கும் இதயம் பழுதுபடும் வாய்ப்பு உண்டு. சூலுற்ற நிலையில் தாய்க்கு 'ஜெர்மன் மீஸில்ஸ்' எனப்படும் ஜுரம் வந்தால் கர்ப்பத்தைக் கலைத்துவிடுவது உசிதம். குழந்தை பிறந்து சில நாட்கள்தான் ஆயின என்றாலும், இதயம் பழுதாக இருந்தால் உடனடியாக ரண சிகிச்சை செய்ய வேண்டிய அவசியம் ஏற்படலாம். சின்னக் குழந்தையாயிற்றே என்று பயந்து ரண சிகிச்சைக்கு உட்படாமல் இருந்துவிடக் கூடாது. சிகிச்சை அளிப்பதில் தாமதம் ஏற்பட்டால் பின்னர் சிக்கல்கள் மிகுதியாகும்.''

டாக்டர் **பி. வி. சந்திரசேகர்** கூறக்கேட்டு எழுதியவர்: **ஆர். பி.**

---

## பெண்கள் கிரிக்கெட்!

''உன் பெண் சுழன்று சுழன்று வேலை செய்கிறாளே எப்படி?''

''அவள் 'சுழற் பந்து வீச்சாளர்'.''





''கிரிக்கெட் விளையாடும் பெண்ணை மருமகளாக்கிக் கொண்டதின் பலனை நான் அனுபவிக்கிறேன்.''

''ஏன்?''

''எது பேசினாலும், மட்டையைத் தூக்கிக் கொண்டு வந்து விடுகிறாள்.''

''ஏண்டி, நேற்று மாட்சில் நீ அந்தப் பக்கமே நின்று கொண்டிருந்தாய்? இந்தப் பக்கமே வரவில்லையே?''

''அது வேறு ஒன்றுமில்லை. அந்தப் பக்கத்து அம்பயர் என் காதலர்!''

''நேற்று இரவு ஒரு பயங்கரக் கனவு கண்டேன்.''

''என்ன அது?''

''என் மாமியார் 'பௌலி' செய்ய, என் நாத்தனார் 'காட்ச்' பிடித்து நான் 'அவுட்' ஆவது போல.''

—ராஜேஸ்வரி

## அன்பு காரணமான ஹைஜாக்!



ஹைஜாக் செய்ய அரசியலோ, பணமோ மட்டும் காரணமாவது இல்லை. அன்பும் காரணமாவது உண்டு. சமீபத்தில் 'பெஸ்ட்' பஸ் ஒன்று பம்பாய் சயான் டிப்போவிலிருந்து காணாமல் போய்விட்டது. விசாரணையில் தெரிய வந்தது இது தான்: 'பெஸ்ட்' டிரைவரான ஏகநாத் என்பவர் உடல்நிலை மோசமாகிவிட்ட தம் மனைவியைப் பார்க்க விரும்பி வேறு வாகன வசதி கிடைக்காததால் பஸ்ஸை எடுத்துக் கொண்டு இந்திராபூர் கிளம்பிவிட்டார்!

ஆதாரம்: ஃபெமினா
தகவல்: மைதிலி ராஜன்



விமானக் கடத்தல்காரர்களை எளிதில் முன்னதாகவே கண்டு பிடித்து விடும் ''ஃபிரிஸ்கெம்'' என்ற இந்தப் புதிய கருவியை அண்மையில் அமெரிக்கா உருவாக்கியுள்ளது.

விமானத்தில் ஏறும் முன், பயணியை இக்கருவியின் இடையே நடக்கச் செய்தாலே போதும். கடத்தலுக்குத் தேவையான துப்பாக்கி போன்ற சாதனத்தைப் பயணி வைத்திருந்தால், உடனே அபாய அறிவிப்பு ஒலிக்கும்.

நன்றி -- ''ஸ்பான்''
-- ஆர். வெங்கட்ராமன்

## நீலத்தின் தாபம்!

ரவி

[illegible] நீங்களே உளத்தே
[illegible]...
[illegible] அகல்விளக்கை
ஏற்றிவைத்தோம் இறைவனுக்கே
[illegible] மனவிளக்கை
ஏற்றிவைக்க மறந்தோமோ
[illegible] இரக்கத்தால்
[illegible] சிறந்தோமோ...
[illegible] புன்செயல்கள்
புரியாமல் இருந்தோமோ...



# தீப மங்கள ஜோதி நமோ நம:



"தீபமங்கள ஜோதி நமோ நம:"
"தமஸோ மா ஜ்யோதிர் கமய"
"இறைவன் ஒளி தோன்றட்டும் என்று
அருளினார், ஒளி தோன்றிற்று....."

இருளை நீக்கும் விளக்கு. அறிவைத் தூண்டும் சுடர். அருளைக் காட்டும் ஜோதி. தொன்று தொட்டு இவற்றை மனித குலம் வழிபட்டு வந்துள்ளது.

திருவண்ணாமலையிலே கார்த்திகை மாதம் குன்றிலிட்ட விளக்கு கலங்கரை விளக்கமென ஒளிரும் போது, தென்னகமெங்கும் இல்லங்கள் தோறும் ஜோதி வடிவில் அறிவும், திருவும், அருளும் ஒருசேர வழிபடப் படுகின்றன.

இவ்வாண்டு கார்த்திகை நன்னாளைக் குறிக்கப் பூம்புகாரிலே விதம்விதமான விளக்குகளின் அழகிய பொருட்காட்சி ஒன்று, சென்னை மவுண்ட் ரோடு 166A எண் ஷோருமில் அமைக்கப் பட்டுள்ளது. அத்துடன் பூம்புகாரின் ஷோரூம்களில் விளக்குகள் வாங்குவோருக்கென 28.11.76 முதல் 7.12.76 வரை தனியாக 5% தள்ளுபடிச் சலுகையும் உண்டு. அன்பர்கள் திரளாக வந்து மகிழ்ந்து பயன் பெறுக!



# பூம்புகார்

கைவண்ணப்
பொருள்கள்
களஞ்சியம்.

தமிழ்நாடு கைவினைத்திறன்கள் வளர்ச்சி
இணையகம், சென்னை 600 006

Poompuhar



# அக்னி மழை

கெ.ராமசாமி

செல்லம்மாள் சிறுப் பொறுக்கப் புறப்பட்ட போது ஏழு மணி. அவளுக்கு வயிறு சரியில்லாமல் இருந்தது. நீட்டுப் போகும் நாள். கர்ப்பமெல்லாம் வலித்தது. என்னமோ ஒரு தொலையாத குட்டிச்சாத்தான் தலை மேலே அமர்ந்தது போல.

''ந்தா, புள்ளே!... தா, காட்டுக்குப் போறேங் காட்டியும்!... ஏதாச்சும் லாரி போகும். ராசவேலுகிட்டச் சொல்லி வை.''— இருளாயி எதிர்ப்பட்டபோது செல்லம்மாள் சொன்னது.

''புள்ளையையும் தூக்கிகிட்டா போறே? பங்குனி மாசத்து வெய்யிலு!''

இவ்வளவு பெரிய தண்ணீர்க் கஷ்டம் இந்தப் பகுதிகளை ஆக்கிரமித்து அவள் பார்த்ததில்லை. பூமியில் தீப்பற்றி எரிந்து மிச்சம் சாம்பல் விழுந்தது போல எங்கெங்கும் எல்லாமும் கருகிக் கிடந்தன.

செல்லம்மாள் மேடேறிப் பிள்ளையாரைத் தாண்டும் சமயம் வெய்யிலில் கள்ளாப்புக் கூடிற்று.

கண்மாயை நெருங்க நெருங்க எதிரே வந்தவர்கள் அறிவித்த செய்தி அவள் வயிற்றில் தீ மூட்டிற்று. 'கண்மாயில் மரம் வெட்டுவதைத் தீவிரமாய்த் தடுப்பதற்கு ஆட்கள் வந்து விட்டனராம். அது கவருமெண்டு மரமாம்.'

செல்லம்மாள் திகைத்து வெய்யிலில் நின்றாள். செருப்புச் சுட்டது.

ஒருவன் மட்டும் ஒரு விஷயத்தைச் சந்தோஷமாக்கித் தெளித்துவிட்டுப் போனான். கூர்மிப் பட்டியைச் சுற்றிக் கொண்டு கிழக்குப் புறக் கரை வழியாக வேலங் காட்டினுள் நுழைந்து, வெளி பார்டரிலிருந்து சுமார் இரண்டு மைல் உள் ஒதுங்கிச் சென்றால் யாருடைய கண்காணிப்பும் கிட்டத்தட்ட இராதாம். அவ்வளவு ஆழ்ந்த காட்டினுள் காவல்காரன் யாரும் வர வழியில்லையாம்.

கூர்மிப்பட்டியை அவள் அடைந்தபோது சூரியன் உச்சியில் உஷ்ணம் பொழிந்துகொண்டிருந்தான்.

கண்மாயின் கிழண்டைக் கரை மேடு ஏறிச் சுற்றிலும் பார்த்தபோது நா வறண்டது.

நாடார் பம்பு ஓடவில்லை. தண்ணீர் இல்லை. கிணற்றில் ஒரே இருட்டு. அது எந்த இடத்தில் முடிகிறது என்று கண்டு பிடிக்கவே முடியவில்லை...!

முதுகில் கட்டியிருந்த சோளத்தைத் நாசி ஊறித் துப்புறவாக்கிக் கப்பும் கிளையுமாய்ப் படர்ந்திருந்த ஒரு கடம்ப மர நிழலில் மூன்று கல் போட்டுச் சற்று நீர்ப்பதமாகவே சமைத்துக் கொண்டாள் செல்லம்மாள். அதன் வாசனை மெல்ல மெல்ல அவள் பசியைக் கிளப்பிற்று.

பசியாறிக் குழந்தையைப் பார்த்தாள். அதன் வயிறு மகோதரம் வந்தது போல் வீங்கித் தெரிந்தது. எதைத் தின்றாலும் தின்னாமலே விட்டாலுமே இப்படித்தான் ஆகிறது அதற்கு. கால் கைகள் சூம்பிப் போயிருக்கும்—சில்லுச் சில்லான முட்டிகள்.

கரம்பு நிலங்களைத் தாண்டிவிட்டாள். வெளிக் காட்சிகளின் எந்தப் பகுதியும் அவளை ரஞ்சகம் செய்யவில்லை. எல்லாமே தீசலாயிருந்தது. பூமிக் கர்ப்பத்தினின்று ஜனித்த பூதங்கள் போல மொட்டை மரங்கள் நின்று கொண்டிருந்தன. செல்லம்மாள் அரிவாளை இடுப்பினின்று எடுத்தபோது ஒரு பயம். வெளி விளிம்பாய் இருக்கிறதே?... கண்டிப்பாய் எவனாவது காவல்காரன் வரலாம். ஒரு பெருமூச்சு. இந்தக் கருங் கட்டைகளுக்கிடையே மறைந்து மறைந்து நெடுந் தொலைவு உட்புறம் சென்றுதான் விறகு தறிக்க வேண்டும். குழந்தை கனமாய்க் கனத்தது. நீட்டுப் போகும் தேகம். களகளவெனவும் பளபளவெனவும் வயிற்றினுள் சப்தசங்கமங்கள்.

அவள் மெல்லத் தன் பலஹீனங்களை எண்ணிக் கொண்டே கரிசலில் சென்றாள். குடை வடிவ ஓடை மரங்களினிடையே அளவாக மகிழ மரங்கள் இருந்தன. செல்லம்மாளுக்குக் கடுமையான வயிற்றுக் குத்தல் எடுத்தது. அடுத்த வீட்டு முத்தம்மாள் தன் குடிசைத் தரையைச் சமன்படுத்தித் திமிசுக் கட்டையால் தட்டிக் கொண்டிருந்தபோது— நேற்று மாலை — இதே மாதிரி வலி வந்தது. அம்மா! குடலை முறுக்கிப் பிழிகிற மாதிரி... பால்குடி மறந்திருந்த குழந்தைக்கு ஏணை பிட்டு ஓர் எட்டி மரத்தில் கட்டினாள்.

'' தூங்கித் தொலை மூண்டம்... அழுது அழுதுதானே கெடுக்குது!''

போட்டிக் கதை



பிறகு வேலையை ஆரம்பித்தாள். குழந்தைக்கு வாயில் கவைக்கக் கொஞ்சம் சோளக் கஞ்சியிட்டாள்.

இடையிடையே பாய்ந்த முன்னே உருவிக் கொண்டு செல்லம்மாள் பல நினைவுகளில் ஆழ்ந்தாள். அரிவாள் கூர் இல்லாமல் இருந்தது.

ஒரு தடவை காரை வீட்டுக்காரங்க எனப்படும் ராக்கன் குடும்பத்தினருடன் தான் பரிச்சயம் வைத்துக் கொண்டிருந்தது அவளுக்கு ஞாபகம் வந்தது. அவர்களுக்கு உளுந்து மில்லில் வேலை. டவுன் கரைக்குச் சைக்கோள் வண்டியிலே போவாரு. உளுந்து அசக்குதல் அல்லரில் போட்டு உடைத்தல் என்கிற பேச்செல்லாம் அடிபடும். ராக்கன் மகன் படித்தவன். ''இங்கே உள்ள கருவேலங் காட்டிலே எண்டோமாலஜி செய்யலாமே ?'' என்பது போல ஏதாவது உளறிக் கொண்டிருப்பான். [சொய்ய்ய்யென்று ஆக்ரோஷமாய்ச் சிறு நீர் அடித்து நுரை கிளப்பும் தங்கள் வீட்டு மாடுகளைப் பராமரிக்கவும், சினையான எருமை கன்று போட்டால் கன்றின் ஞாளம்



''என் கணவரது பல்லைத் தினமும் நான்தான் தேய்த்து விடுகிறேன்.''

''அம்மம்மா! ஏன் அப்படி?''

''இரவில் தூங்கும்போது பல் செட்டைக் கழற்றி வைப்பார். காலையில் தேய்த்து வைப்பேன்.''



''இந்த மூக்குக் கண்ணாடிக்கு என்ன பேர்?''

'''கோ-கோ' கண்ணாடி.''

''ஒரு தடவை 'கோ' சொன்னால் போறாதோ?''

''இரண்டு கண்ணாடி இருக்கே!''

— வாலி எழுதிய 'ராகம் தானம் பல்லவி' நாடகத்தின் நகைச்சுவைகள்.

— டிம்பிள்

---

லைக் கிள்ளி மாட்டுக்கு வெந்நீர் வைத்து ஊற்றவும் செய்வான். சுயபரித்தியாக மனோ பாவம் கொண்டவன். அவன் தான் ஒரு தடவை கூண்டு வண்டியில் கண்மாய் வரை கொண்டு வந்துவிடுகிறேன் என்று செல்லம்மாளை அழைத்து வந்தான். செல்லம்மாள், மூப்பனாரின் குதிரைவாலிப் பயிர் நிலத்தின் அருகே தாவென இறங்கிக் கொண்டாள். அந்த அவ்வளவு பெரிய படித்த மனிதன், ''சந்திரன்லே இறங்கினானே செல்லம்மா, அவன் காலடித் தடம் அங்கே அஞ்சு லட்சம் வருசத்துக்கு அழியாதாம் !..., அதே மாதிரி உன் நினைப்பு எனக்குக் கோடி வருசத்துக்கு மறையாது....'' என்றான்.

இந்த விறகுக் குப்பைக்கு மத்தியில் அவனை எதுக்கு நினைக்கணும்னு நினைத்தாள் அவள். எடுக்கக் கூடாது என்று ரொம்ப நேரமாய் மடக்கி வைத்திருந்த தாமரை இலைப் பொட்டணத்தை விரித்தாள். கழிவு நீரில் முளைத்த தாமரை. பொட்டணத்தில் சிந்தாமணி — அவித்த மொச்சை — இருந்தது. உப்புப் படிந்து நல்ல ருசியாயிருந்தது. வயிற்றின் ஓர் ஓரத்திலிருந்த குத்தலைக்கூட லட்சியம் செய்யாமல் அத்தனையும் தின்றாள். பிறகு கப்பும் கிளையுமாயிருந்த ஒரு உடை மரத்தை சிலும்புச் சிலும்பாகப் பிய்ப்பதில் முனைந்தாள். முரட்டு ஆட்டை. ஜீரணிக்க முயல்கிற மலைப் பாம்பு போல அவள் இந்த வேலையை முடித்து வள்ளிக் கொடியால் விறகுக் கள்ளை நீளவாட்டத்தில் கட்டிச் செங்குத்தாய் தூக்கி நிறுத்தியபோது கண்ணில் மின்னல் வீச்சிட்டது.

குழந்தை நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தது. ஒரு நிமிஷ ஓய்வுக்குப் பின் சூரியன் கோணத்தைக் கவனித்தாள். அலிச மரத்திடையே ஆரஞ்சு ரசம் தெளிப்பது போல தலையில் ஒரு பெரிய மேகத் தலையணையைத் தூக்கியவாறு சூரியன் தெரிந்தது.

ஆறு மணிக்கெல்லாம் மண் அடிக்கிற பேச்சியம்மன் லாரி, கண்மாய்க் கரைக்கு வரும். காவல்காரன் கண்ணில் படக் கூடாதே என்கிற குருட்டு ஆத்திரத்தில் சற்றுத் தள்ளியே உள்ளே வந்துவிட்டதை அப்போதுதான் உணர்ந்தவள் முனைக்குச்சி அடித்துக் கட்டப் பட்டது போல் நின்றாள்.

உடம்பு இருந்த பலவீனத்தில் விறகைத் தான் தூக்க முடியும்.

பங்குனி மாதம்தான் என்பது அவளுக்குச் சற்று ஆறுதல். ஏழு மணி வரை வெளிச்சம் இருக்கும். ஒரு நடை விறகைக் கொண்டு போய்ப் போட்டுவிட்டு வந்து குழந்தையைக் கொண்டு போய்விடலாம். குழந்தை உறங்குவதால், எழுப்பவும் வேண்டாம்.

பேய் மாதிரி அவள், பட்டை உறிந்த கருவை மர காட்டினிடையே நடை போட்டபோது வானத்தைச் சூழ்ந்த இருள் பிரியவில்லை. கண்மாய் வெளி விளிம்புக்கு வர இருபத்தைந்து நிமிஷம் நடக்க வேண்டியிருந்தது. முதலில் விறகுக் கட்டைக் கடத்திக்கொண்டு வந்து விட்டால் நம்பிக்கையான பேச்சியம்மன் லாரி டிரைவர் யாரும் சொல்லாமலே தூக்கிக் கொண்டு போய்ப் போட்டு விடுவான். இப்படி எத்தனையோ தடவை உதவியிருக்கிறான் அவன்...

ரோட்டடியில் விறகைச் செங்குத்தாக மைல் கல்லு மாதிரி நிறுத்திவிட்டு, தலைத் துணியைக்கூட மறந்து திரும்பினாள். கை கால்கள் பயத்தினால் கோணக் கோண இழுத்தன. தான் செய்தது மிகவும் தப்பிதமான காரியம் என்று நினைக்கும் ஒவ்வொரு நிலைவு அணுவுக்குமிடையே எண்ணிச் சூடு பட்டாள்.

எக்காலமும் கருகாத கள்ளிச் செடியும் பூமி நெடுகக் கரிந்து கிடக்கும் ஓர் இடத்துக்கு வந்ததும்தான், இந்தக் கள்ளிக் கூட்டத்தையோ, அதை அடுத்திருந்த எருக்கஞ் செடிகளையோ தான் காணவே இல்லையே என்கிற ஞாபகக் குழப்பம் சூழ்ந்தது.

ஒரு பர்லாங் திரும்பி வந்தவள், வேகமாக அமாவாசை இருள் பூத்தது கண்டு குதிர்ந்து நின்றாள்.

அடிப்படை உரமற்ற பயிர் போல அவள் துவண்டாள். லாரி வரும், ஆள் துணையுடன் காட்டுக்குள் நுழையலாம் என்கிற தைரியம் கூட மங்கிக் கொண்டிருந்தது. லாரியைக் காணோம். மரங்களின் உட்பகுதியிலிருந்து விரிந்த வானைப் பார்த்துக் கொண்டே வெளி வருவது மிகவும் எளிது என்றும், அதேபோல மரங்களினிடையேயுள்ள ஒரு குறிப்பிட்ட இடத்தை அடையாளம் கண்டு போய்ச் சேருவது மிகவும் கடினம் என்றும் இப்போது தான் புரிந்தது. பற்பல மரங்களினிடையே புகுந்து கனத்த இருளில் எங்கெங்கோ போய் வந்து கொண்டிருந்தாள். சுமார் ஏழு மணிக்குக் கண்மாய்க் கிழக்கடைப்புறம் மின்ன ஆரம்பித்தது. ஐயாயிரம் ஏக்கருக்குப் பாய்கிற அந்த ஏரியின் கடல் போன்ற பரப்பில் ஒரு துளி மாதிரி இருக்கும் குழந்தை...குழந்தை!

நரியும், பூச்சி, பாம்புகளும் நடமாடும் காட்டில் குழந்தை ஏணையை அசக்கி அசக்கி அழ ஆரம்பித்தது. முதலில் அம்மா எங்கேயிருந்தாவது வந்து தன்னைத் தூக்கிக்கொள்வாள்

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




கனிவான பியர்ஸ் சோப்பினுல் காத்திடுவீர் உங்கள் மேனி மெருகை. மாணிக்கப் படிகம்போல் மிளிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூற்றுண்டு கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது. மிருக மென்மை கொடுக்கும் பியர்ஸ்—தூய்மைக் கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லிண்டாஸ்-PS. 56-145 TM




என்கிற நம்பிக்கை அதற்கு. எப்போதும் அப்படித்தான் பழகியிருந்தது அது.

இன்று இந்த இருட்டும் சப்தங்களும் புதிதாயிருக்கின்றனவே என்று எண்ணிற்று அது. அதன் கற்பனைகளிலும் சிந்தனைகளிலும் என்னென்ன தோன்றின என்று யார் அறிவது?

ஒரு பய உத்வேகத்தில் கிறீச்சென்று அழ ஆரம்பித்தது.

அப்போது அத்தனை வருஷமாய் இல்லாத மழை மெதுவே அசைந்து கொடுத்தது!... இத்தனை நாளாக இல்லாத மழை இப்போது தேவைதானா? அதுவும் இந்த மாலைப் பொழுதில், இப்படிச் செல்லம்மாள் அலைமோதிக் கொண்டிருக்கும்போது?

அப்போதுதான் லாரி வரும் சப்தம் வெகு தொலைவில் கேட்டது.

செல்லம்மாள் மிகவும் சப்தமாக அலறி லாரி வரும் பாதைக்குக் குறுக்கே வந்தாள். அவளுக்குத் தெம்பும் நம்பிக்கையும் கூடின. மனசில் அவிழ்த்து விடப்பட்டிருந்த பய மிருகங்கள் மெல்ல மெல்ல உள்வாங்கின.

லாரி மேடுகளில் ஏறியும், பள்ளங்களில் இறங்கியும் அந்த நிசப்தத்தினூடே பலத்த குரலெழுப்பிக் கர்ச்சித்துக் கொண்டு வந்தது. பேய்போன்ற செல்லம்மாளைக் கண்டதும் தட்டென்று நின்றது.

''தே, யாரு அது இருட்டுக்குள்ளாக?...''

''ஐயா!... டிரைவரு ஐயா!... என்னத்தைய்யா சொல்ல?... சாயங்காலமா வெறகு வெட்டி முடிச்சதும் புள்ளையைப் பிறகு எடுத்துக்கொள்ளலாம்னு வெறகுச் சொமையைக் கொணந்து போட்டுட்டுத் திரும்பறதுக்குள்ளா இருட்டிருச்சி சாமி!....ஊட ஊட மயக்கமா வந்ததனாலே நெனைச்ச மாதிரி திரும்பப் போவ முடியல்லே!... புண்ணியமாப் போவட்டும்... உடனே வாங்கய்யா.''

''அடிப் பாவி மகளே!'' ஆக்ரோஷமாய்க் கத்தினான் டிரைவர். ''மேற்கே அய்யம்பட்டி, புளுகுமரணி, மேலக் கால்வாயெல்லாம் செம்மத்தியான' மழை... கோண வாய்க்கால் பூரா கரை வழியத் தண்ணி வந்து கண்மாயிலே விழுகுது...நீ சொல்ற இடத்தை அடையாளம் பார்த்தா கோண வாய்க்கால் தண்ணி கட்டுற இடத்திலேதான் குழந்தை இருக்கு ... ஐயய்யோ! ஒண்ணுமே செய்ய முடியாதேடி பாவி!... புள்ளையைப் போட்டுட்டுப் பலாப்பழம் எடுத்தவ கதை மாதிரி ஆச்சேடி! என்னத்தைச் செய்ய...''

நாலைந்து இடிகள் அவள் வயிற்றில் பின்னிப் பின்னி வாங்கின.

''இந்த மூன்னுக் காட்டிலே தண்ணி வந்துட்ட.தானா, பத்துப் பன்னிரண்டு நாட்களுக்கு உள்ளே யாரும் இறங்கவும் முடியாது... படகு, கட்டுமரம் எதுவுமே காட்டுக்குள்ளே நுழையவும் முடியாது....''

''அட கொலைகாரப் பய மழையே!''என்று வானத்தை நோக்கிக் கூவினாள். ''இத்தனை நாளாகக் கேட்டோமே, கெஞ்சினோமே!... வந்தியா, வந்தியா, வந்தியா!'' என்று வயிற்றில் அடித்துக் கொண்டே கூவினாள். அவளது வாயின் வழியே இரத்தம் வந்தது. வயிற்றுப் பிழைப்புக்காகவும் சாப்பிடுவதற்காகவும் இத்தனை சுமையை இத்தனை காலமாய் சுமந்த உடம்பின் நரம்பு முடிச்சுக்களில் உணர்வுகள் ஓடின. காலையில் சாப்பிட்டிருந்த கூழ் ஜீரணம் ஆகியும் ஆகாமலும் இருந்தது. பசை போல் வாய் வழியே வந்து படர்ந்தது. லாரி டிரைவர் கந்தசாமி அவளை எப்படியாவது கிராமத்துக்குக் கூட்டிப்போய்ச் சமாதானம் செய்து கொள்ளலாம் என்று எண்ணினான்.

'' டிரைவர் அண்ணே.... போச்சே.... போச்சே... இப்போ அது உயிரோடதானே இருக்கு... மழை பெயுதே... அதும் மேலெல்லாம் நனையுமேண்ணே... குளிருமே...குளிருமே... குளிருமே... இப்போ அதுக்குப் பசிக்குமேண்ணே... ஐயோ, ஏனைமேலெல்லாம் தண்ணி வந்து மூழுகடிச்சிடுமா? மழையை யாருகேட்டா?.. பாவிப்பய மழை''

''பதறாதேம்மா!... நீ இவிப் போயி எதுவும் செய்ய முடியாது. காலையிலே நீச்சல் தெரிஞ்ச ஆளுங்க நாலு பேரை அனுப்புவோம். ரொம்பச் சிரமப்பட்டுக் குழந்தையைக் கண்டு பிடிச்சடலாம். ஒரு விசயம். நீ வெறகு வெட்ட இறங்கினப்போ நடமாட்டம் எதுவுமே இல்லியா?''

''இல்லேயே. நான் என்னத்தைச் செய்ய?''

''பொதுவா நீ சொல்ற இடத்துக்கு யாரும் வரமாட்டாஹ. ஆட்டுக்குக் கருவேலங்காய் அடிச்சுப் போடற இடைப் பயல்களும் அவ்வளவு தொலைவுக்கு வரமாட்டாஹ.''

அப்போதுதான் பொறி தட்டியது போல ஒரு சின்ன விஷயம் அவளுக்கு ஞாபகம் வந்தது. புறா சுடும் துப்பாக்கி ஓசை காட்டின் ஒரு மூலையில் கேட்டு எதிரொலித்தது அவள் ஞாபகம் கொண்டாள். தான் விறகு வெட்டிக்கொண்டிருந்த சமயம் அவர்கள் எங்கே இருந்திருப்பார்கள்?... குழந்தை அவர்கள் கண்ணில் பட்டிருக்குமா?

**வி**ஷயம் கிராமத்துக்குள் பரவவும் அனுதாபங்களும், பரிதாப ஓலங்களும் சிலிர்த்துப் பிறந்தன.

விடிய விடிய நச்சு மழையாகப் பெய்து பூமியெங்கும் களிமண் ஊறிற்று. களிமண் சகதியினுள் முட்கள் புதையுண்டு மிதிக்கிற கால்களை யெல்லாம் குத்தின. அத்துடன் அந்தக் கிராமத்து அந்த ஒரு நாளைய நிகழ்ச்சிக் குறிப்புக்கள் முடிகின்றன. மழை பெய்வது சொர்க்கமான ஒரு நிகழ்ச்சி என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஒரு புழுங்கிய உள்ளம் அந்த மழையையே நரகமாக்கி வைத்து ஓலமிட்டது.

# சேரமான் காதலி

## கண்ணதாசன்

### முன்கதைச் சுருக்கம்

கி. பி. 754ம் ஆண்டில் இரண்டாம் சேரமான் பெருமாள் சேர நாட்டின் ஆட்சியைத் தம் மகன் மார்த்தாண்டவர்மனிடம் ஒப்படைத்துவிட்டுத் தல யாத்திரை செய்யப் புறப்பட்டார். குலசேகர ஆழ்வாரானார்.

மன்னரின் மைத்துனன் மகனும் படைத் தளபதியுமான பாஸ்கர ரவிவர்மன் ஆட்சியைக் கைப்பற்றும் ரகசிய முயற்சிகளில் ஈடுபட்டான். அவன் மனைவி பத்மாவதி கணவனின் முயற்சிகளுக்குக் கை கொடுக்கவும் முடியாமல் உதவாதிருக்கவும் முடியாமல் தவித்தாள்.

அரசாங்க ஆலோசகர் நாராயண நம்பூதிரி பாஸ்கர ரவிவர்மனின் சதித் திட்டங்களுக்கு எதிர் நடவடிக்கை எடுத்தார். ஆனால் பாஸ்கரன் அவரது சாணக்கியங்களை வென்றான். ரவிவர்மனின் சூழ்ச்சியால் பாண்டியப் படைகளும் கொங்குப் படைகளும் சேர நாட்டுக்குள் புகுந்தன. நாராயண நம்பூதிரி சிறைப்படுத்தப் பட்டார். மார்த்தாண்டவர்மனும் அவன் மனைவி மெல்லிளங் கோதையும் தப்பிச் செல்ல முயன்றனர். பாஸ்கர ரவிவர்மனின் மனைவி பத்மாவதியும் அவனுடைய சகோதரிகளுமே அவர்கள் தப்புவதற்கு உதவினர்.

சேரநாட்டுக்கு அயல்நாட்டுப் படையெடுப்பால் நேர இருந்த ஆபத்துத் தன்னால் தவிர்க்கப்பட்டதாக முரசு அறிவித்துவிட்டுப் பாஸ்கர ரவிவர்மன் தானே அரியாசனம் ஏறினான். ரவிவர்மனின் காதலி பூதப் பெண் பூஜியாறு தன் கரத்தால் மகுடத்தை அவன் தலையில் சூட்டினாள். நாட்டு நலனை உத்தேசித்துப் பின்னால் நாராயண நம்பூதிரியை விடுவித்து மீண்டும் அமைச்சராக்கினான் ரவிவர்மன்.

நாட்டு நடப்புகளை அறிந்த குலசேகர ஆழ்வார் மனம் மிக நொந்து தல யாத்திரையாகச் சென்ற இடத்திலேயே படுத்த படுக்கையானார். அவரது இறுதிக் காலம் நெருங்குவதை அஞ்ஞாதவாசத்தில் இருந்த அவர் மகன் மார்த்தாண்டவர்மனும் அறிந்தான்; ஆட்சி பீடத்தில் அமர்ந்திருந்த ரவிவர்மனும் உணர்ந்தான். இருவருமே அவரது இறுதி மூச்சு பிரியும்போது உடனிருக்க விரைந்து வந்தனர். குலசேகர ஆழ்வார் திருவரங்கன் திருவடியை அடைந்த காட்சியானது ரவிவர்மனிடம் மனமாற்றத்தை உண்டாக்கியது. மார்த்தாண்டவர்மனிடம் நட்பு கொண்டான்.

விக்கிரம சோழன் செய்து வைத்த உடன்படிக்கைப்படி திருவஞ்சைக் களம் என்ற வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு பாஸ்கர ரவிவர்மன் மூன்றும் சேரமானாக ஆள்வது என்றும் திருவிதாங்கோட்டைத் தலைநகரமாகக் கொண்டு வேணாட்டை மார்த்தாண்டவர்மன் ஆள்வது என்றும் முடிவாயிது. இரு நாடுகளுக்குமே பிரதான அமைச்சரானார், நாராயண நம்பூதிரி.

சேரநாட்டுக்கு வந்து சேர்ந்த அராபிய வியாபாரக் கப்பல் ஒன்றில் முகம்மதுவும் அவரது பேகமும் ரத்தினச் சிலை போன்ற பேரழகி சலீமாவும் வந்திருந்தார்கள். வந்ததும் வராததுமாகப் பாஸ்கர ரவிவர்மனின் கம்பீர எழில் பற்றிக் கேள்விப்பட்டாள் சலீமா. கூடவே அவனது ஆசை நாயகியாக விளங்கும் பேரழகி பூஜியாறு பற்றியும் அறிந்தாள். யதேச்சையாக ஒரு சந்திப்பும் நிகழ்ந்தது.

பூஜியாறு கருவுற்றிருந்தாள். அதனால் அவள் அழகு முன்னிலும் பிரகாசித்தது. பூஜியாறு ஒரு மகாராணிக்கு உரிய அந்தஸ்தையெல்லாம் பெற்றிருந்தாலும் பூதப் பெண் அரியாசனம் ஏற முடியுமா என்பதும் அவளுக்குப் பிறக்கும் குழந்தை ரவிவர்மனுக்குப் பிறகு அரியணையில் அமர முடியுமா என்பதும் பிரச்னைகளாக விளங்கின. ராணி பத்மாவதிக்குக் குழந்தை பிறக்காததால் இந்தக் கேள்விகளுக்கு இடம் இருந்தது.

இத்தருணத்தில் மார்த்தாண்டவர்மனிடமிருந்து உதவி கோரி ரவிவர்மனுக்குச் செய்தி வந்தது. உதயகிரி மலையில் வேணாட்டு மலை வேள் குடியினரில் நாகரிக வளர்ச்சி அதிகம் பெறாத ஒரு கூட்டத்தினர் வசித்து வந்தனர். வேணாடு கேரளத்துடன் சேர்க்கப்பட்டதிலிருந்து அவர்கள் வெறுப்புற்றிருந்தார்கள். திருவிதாங்கோடு தனி நாடானதும் தங்கள் கை வரிசையைக் காட்டத் தொடங்கி இருந்தார்கள்.

மார்த்தண்டவர்மனுக்கு உதவும் முகமாக அம்மலைவேள் குடியினரை அடக்கிய பாஸ்கர ரவிவர்மன் அங்கு மலைஜாதித் தலைவன் மகள் நரங்கினியைச் சந்தித்துச் சகோதர பாசத்துடன் ரட்சை அணிந்து கொண்டான்.

ரவிவர்மனின் பூதக் காதலி பூஜியாறுவுக்குப் பிறக்கும் குழந்தை எதிர்காலத்தில் சேரநாட்டுக்கே பெரிய பிரச்னையாகக்கூடும் என்பதை உணர்ந்த நாராயண நம்பூதிரி பாண்டிய இளவரசன் சீர் மாறன் சீர் வல்லபனையும் அவனுடைய மனைவி அபிராமி நாச்சியாரையும் உதவக் கோரினார்.

அவர்கள் முறையே ராஜசேகர சுவாமி என்ற முக்காலம் உணர்ந்த ஞானியாகவும் சோதிடம் கூறும் மலைக் குறத்தியாகவும் வேடமணிந்து சேர நாட்டுக்கு வந்தார்கள். ஞானி, பாஸ்கர ரவிவர்மனையும் குறத்தி, பூஜியாறுவையும் சந்தித்தார்கள். பூஜியாறுவுக்குப் பிறக்கப் போகும் குழந்தை முன் வினைப் பயன் காரணமாக மூன்றும் சேரமானை ரவிவர்மனையே கொல்லும் என்றும் சேரநாட்டையும் அழிக்கும் என்றும் நம்பச் செய்தார்கள். இதனைத் தவிர்க்க ஒரே வழி குழந்தை பிறக்கு முன்னரே தான் இஸ்ரவேலுக்குக் கப்பலேறிப் போய்விடுவது தான் என்ற முடிவுக்கு வந்தாள் பூஜியாறு. ரவிவர்மனும் வேறு வழியின்றிச் சம்மதித்தான். காதலர் உகுத்த கண்ணீரால் அன்றுதான் கடல் நீர் உப்பானது !

பாண்டிய மன்னன் வரகுணன் காலமானதாகச் செய்தி வந்தது. உடனே இளவல் சீர்மாறனுக்கு ஆறுதல் கூறப் புறப்பட்டான் ரவிவர்மன். மதுரையை அடைந்ததும், ராஜசேகர சுவாமி, குறத்தி ஆகியோர் வேஷம் கலைய, சீர்மாறன்தான் ராஜசேகர சுவாமி என அறிந்தான் ரவிவர்மன். கோபம் பொங்கினாலும் அவர்கள் தன் நன்மையை உத்தேசித்தே நாடகமாடியதை உணர்ந்து சீற்றத்தை அடக்கிக் கொண்டான்.

நாடு திரும்பி மனத் துயர் நீங்காமல் தவித்த ரவிவர்மனுக்கு நாராயண நம்பூதிரி ஆறுதல் கூறினார். பூஜியாறு மீதுள்ள ஆசையை மறக்க மனத்தை மறு பக்கம் திருப்புமாறு வேண்டினார். ''கேரள தேசத்தை மகத்தான பேரரசாக்கத் திட்டமிடு ; ஓர் மன்னனின் ஆண்மை அதில்தான் இருக்கிறது'' என்று அறிவுரை பகன்றார்.



### அத்தியாயம் 2

## ராஜ தரிசனம்

அரசவைக்குச் செலுத்த வேண்டிய காணிக்கைகளை எப்போது செலுத்துவது? அரசரைக் காண்பதற்கு வாய்ப்பே இல்லையே என்று மகமதுவும் சலீமாவும் கவலைப்பட்டார்கள்.

நாட்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகளையெல்லாம் அவர்களுக்கு விபரமாக எடுத்துச் சொல்லி, அமைதியற்ற நிலையில் அரசர் இருப்பதாகவும், அதனால்தான் அரசரைக் காண முடியவில்லை என்றும் அவர்களுக்கு விளக்கினார்கள் அகமதுவும் பாத்திமாவும்.

''அன்றைக்குக் கோயில் அருகில் கண்டோமே. அந்த யூதப் பெண்தானே இஸ்ரவேலுக்குத் திருப்பியனுப்பப்பட்டது?'' என்று வினவினாள் சலீமா.

''அவளேதான். காதலுக்காக முடி துறந்த மன்னர்களைப் பற்றி நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். காதலனைக் காக்க காதலைத் துறந்த ஒருத்தியை இப்போது தான் பார்க்கிறோம். சுண்டினால் ரத்தம் தெறிக்கும் அழகு படைத்தவள் யூஜியானா. அவள் மேனியைப் போலவே உள்ளமும் வெள்ளை. இல்லையென்றால் கருவுற்ற நிலையிலும் நாட்டை விட்டுப் போகச் சம்மதிப்பாளா?'' என்றாள் ஜெபுன்னிஸா.

''அவளொரு பைத்தியக்காரி. அரசரையும் முடி துறக்கச் செய்து தன்னோடு அழைத்துப் போயிருந்தால் ஒரு காவியமாகவே ஆகியிருப்பாள்!'' என்றார் அகமது.

''இத்தோடு விட்டுவிட்டதென்று யார் கண்டது? இன்னும்கூட இது தொடர்வதற்கு வாய்ப்பிருக்கிறது'' என்றாள் பாத்திமா.

''ஆண்டவர் என்ன நினைக்கிறார் என்று யாருக்குத் தெரியும்?'' என்றார் மகமது.

''என்னவோ எனக்கு இதெல்லாம் புரியவில்லை. தலையை வலிக்கிறது.'' என்று கூறிவிட்டு, மாடத்திற்குச் செல்வதற்காக சலீமா புறப்பட்டபோது, யூசுப் ஓடோடி வந்தான்.

''அரசரைப் பார்ப்பதற்கான நேரம் கிடைத்து விட்டது'' என்றான்.

''எப்போது?'' என்று கேட்டார் அகமது.

''நாளைக் காலை ஒன்பது நாழிகைக்கு! அரசவை மண்டபத்தில் காணிக்கை செலுத்துவோரை மட்டும் அரசர் சந்திக்கிறார்'' என்றான் அவன்.

அவனுக்கு மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்கிற்று. மற்றவர்களுக்கு நல்ல சேதி

கொண்டு செல்லும் குதிரைக்கு வாயில் நுரை தள்ளுவதில்லையா? — அதுபோல.

அந்தச் செய்தியையும் சாதாரண மாகவே கேட்டுக் கொண்டாள் சலீமா.

மாடத்துக்கு அவள் ஏறிச் சென்ற போது அவளது நிழல் போலக் கூடவே ஏறிச் சென்றாள் ஜெபுன்னிஸா.

படிக்கட்டில் ஏறும்போதே, ''ஜாக் கிரதை'' என்றாள்.

''நான் பார்த்துத்தான் போகிறேன். வழுக்கி விழுந்துவிட மாட்டேன்!'' என்றாள் சலீமா.

''நாளைக்கு அரசரைப் பார்க்கும் போது கருப்பு சல்லாத் துணியால் உன் முகத்தில் பாதியை மூடிக் கொள்'' என்றாள் ஜெபுன்னிஸா.

''ஏன், அரசரும் அப்படித்தான் சூடிக் கொள்வாரா?'' என்று கேட்டாள் சலீமா.

''இல்லை. உன்னைப் பார்த்து அவர் மயங்கி விட்டால் ஆபத்து!'' என்றாள் ஜெபுன்னிஸா.

''பைத்தியமே! நான்தான் மயங்கக் கூடாதே தவிர, அவர் மயங்குவதால் எனக்கென்ன வந்தது? அவர் அரசரா னால் என்ன? சக்ரவர்த்தியாகவே இருந் தால்தான் என்ன? நான் என்னுடைய மார்க்கத்தில் இருந்து வழுவமாட்டேன். நான் அறியாத பெண்தான். ஆனாலும் என்னுடைய காலடிச் சுவடுகளை கற்ற வர்கள் பின்பற்ற வேண்டும என்று நினைப்பேனே தவிர, யாருடைய அடிச் சுவட்டுக்கும் என்னை ஒப்புக் கொடுக்க மாட்டேன். நான் பிறந்தது இஸ்ர வேலில் அல்ல; அரேபியாவில்'' என்றாள் சலீமா.

இவ்வளவையும் சொல்லிக்கொண்டே படுக்கையில் அவள் அமர்ந்தாள்.

''சீச்சீ! நான் வேடிக்கைக்காகச் சொன்னேன். நீ ஏதேதோ சொல் கிறாயே!'' என்று சொல்லிக் கொண்டே ஜெபுன்னிஸா அவள் பக்கத்தில் அமர்ந் தாள்.

சலீமா கட்டிலில் சாய்ந்து உட்கார்ந் தாள். தந்தப் பதுமை ஒன்று சிற்பக் கூடத்தில் அமர்ந்திருப்பது போன்றிருந் தது அது. ஜெபுன்னிஸா ஒரு பாரசீகக் கவிதையைப் பாட ஆரம்பித்தாள்.

'' ஏ, அழகியே!

காபூல் நகரத்து இனிய திராக்ஷைகள் எனக்குக் கசந்து விட்டன.

சுவை நிறைந்த மது ரஸம் எனக்குப் புளித்துப் போய் விட்டது.

எனது கண்ணாடிக் கோப்பைகள் தீண்டுவாரில்லாமல் கிடக்கின்றன.

இவ்வளவு காலமும் பட்டுத் துணி யில் எழுதி வந்த எனது எழுதுகோல் உன் கன்னங்களில் எழுதத் துடிக்கிறது.

உன் கன்னங்களின் மீது சாய்ந்திருக் கும் போதே மரணம் என்னை அணைத்துக் கொள்ளுமானால், அதையே ஒரு பாக்கிய மாகக் கருதுவேன்!''



# கோத்ரெஜ் ஸ்டோர்வெல்



விசேஷ லாக்கர் டிஸைன்
கூடுதல் பாதுகாப்பளிக்கிறது.



**ஸ்டோர்வெல் மைனர்**
—லாக்கருடன் அல்லது
லாக்கர் இன்றி.

## புதிய 'காம்பேக்ட்' வகைகள்



ஸ்டாண்டர்ட் ஸ்டோர்வெல்லைப் போன்றே அதே உள் அகலம். அதே ஸ்டோர்வெல் தரச் சிறப்புடன், தேர்ந்தெடுக்க ஆறு டிஸைன்கள். ஆயினும் உயரத்-திலும் அகலத்திலும் கொஞ்சம் குறைவு—இடவசதி, பணவசதி குறைந்த இல்லங்களுக்கு உகந்தது.



**புதிய ஸ்டோர்வெல் 'வார்ட்ரோப்'**
ஸ்டாண்டர்ட் அளவைவிட, கூடுதல் அகலம் மற்றும் உள் அகலம், எனவே கூடுதல் இடவசதி. ஆகவே ஆடைகள் மடிப்பு குலையாது. உள்ளமைந்த லாக்கர் மற்றும் அட்ஜஸ்ட் செய்யக்கூடிய ஷெல்புகள்.

நான்கு ஷெல்புகள் கொண்ட ஸ்டோர்வெல் இப்போது மத்திய அரசு அலுவலகங்களுக்கு

# இந்த ஸ்டீல் கப்போர்ட்கள் போலவே தயாரித்தளிக்க மற்றவர்கள் மிகவும் முயன்று கொண்டிருக்கிறார்கள்.

பல ஆண்டுகளாக கோத்ரெஜ் மிகச் சிறந்த ஸ்டீல் கப்போர்ட்களைத் தயாரித்தளித்து வருகிறது. உதாரணமாக, ஸ்டாண்டர்ட் ஸ்டோர்வெல் 6 வகைகள், ஸ்டோர்வெல் மைனர் 2 வகைகள், மேலும் சமீபத்தில் வெளிவந்துள்ள காம்பேக்ட் ஸ்டோர்வெல் வகைகள். அத்துடன் இவை அனைத்திலும் அதிக இடவசதி கொண்ட, புதுமைச் சிறப்புகள் அமைந்த ஸ்டோர்வெல் வார்ட்ரோப்.

காலங்காலமாக, கோத்ரெஜ் தரம், மற்றும் டிஸைன்களையே பின்பற்றி மற்றவர்களும் தயாரிக்க முயன்று வருகின்றனர். ஆயினும் இந்தத் துறையில் நாங்களே முன்னணியில் நிற்கிறோம். காரணம் எங்களின் கடும் முயற்சிகள். எங்களின் இம் முயற்சிகளினால் உங்களுக்கு ஈடிணையற்ற ஸ்டோர்வெல் கிடைக்க வழி ஏற்படுகிறது.

உண்மையில் அன்று முதல் இன்று வரை உள்ள நிலை இது.

நாங்கள் ஸ்டோர்வெல்லை உட்புற உறுதி மிக்கதாய்த் தயாரிக்கத் தொடங்கினோம். அதன் பளபளப்பான மேற்புறப் பெயிண்ட் பூச்சுக்கு அடியில் உள்ள, துருப்பிடிக்காத பகுதி ஆண்டுக் கணக்கில் உழைக்கிறது.

நாங்கள் நவீன பாணியில், மும்முனைத் தாழ் (போல்ட்டிங்) அமைப்பு மூலம் கூடுதல் பாதுகாப்பு திறன் கொடுத்துத் தகர்க்க முடியாத கோத்ரெஜ் பூட்டை இணைத்தோம்.

இன்னும் பல புதுமைகளை நாங்கள் புகுத்தினோம் : வெளிக்குத் தெரியாத, விசேஷ 'சானல் க்ரிப்' லாக்கர்கள், தகர்க்க முடியாத கதவுக் கீல்கள் மற்றும் குழைவானான விளிம்புகள்.

ஒவ்வொரு முறை புதுமை ஒன்றை நாங்கள் புகுத்தும்போதும், அதை மற்றவர்களும் பின்பற்றத் தொடங்கினர்.

ஆயினும் மற்றவர்கள் எளிதாகப் பின்பற்ற முடியாத சிறப்புகளும் இருக்கின்றன.

தரச் சோதனை—தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் நூற்றுக்கு நூறு பரிசோதனை.

நவீனப்படுத்தும் முயற்சிகளை மேற்கொள்ள கோத்ரெஜிற்கு இருக்கும் அபரிமிதமான வசதிகள்.

மேலும் அபிவிருத்தி அம்சங்களுக்குப் பின்பலமாக உள்ள தனிப்பட்ட ஆராய்ச்சி நிலையம்.

இன்னும் சொல்லப் போனால், தரச் சிறப்பு என்று வருகிறபோது எங்களுக்கு நாங்களேதான் மிகப் பெரும் போட்டியாளர்கள்!



**ஸ்டோர்வெல் மாடல் 1**
—வெளிநாட்டுக் கண்ணாடி அமைந்த ஆளுயரக் கண்ணாடி— முழு உருவம் பார்க்கும் வசதி.

## இலவசம்!

**கோத்ரெஜ் ஸ்டோர்வெல் விவர வெளியீட்டுக்கு**
இம் முகவரிக்கு எழுதவும்:
**கோத்ரெஜ் அண்ட் பாய்ஸ் மா. கம். பிரை. லிட்.**
4 ஏ, ஹோம் ஸ்ட்ரீட், போர்ட்,
பம்பாய்-400 001

**உன்னதமான தயாரிப்புகளுக்கு ஒப்பற்றது — கோத்ரெஜ்**

'டி.ஜி.எஸ். அண்ட் டி.' ரேட் காண்ட்ராக்டில் கிடைக்கிறது.

U/GS/16/6A TAM

— இந்தப் பாடலை வெகு சுகமாகப் பாடினாள் ஜெபுன்னிஸா.

"சீ! இதென்ன பாட்டு? மதுப் போதையில் மயங்கிய எவனோ, காதல் போதையில் உளறியது. வேறு எதையாவது பாடு" என்று சொல்லிக்கொண்டே தலையணையில் தலை வைத்தாள் சலீமா.

ஜெபுன்னிஸா சொந்தத்தில் கற்பனை செய்து பாட ஆரம்பித்தாள்.

"அலை வருவது கடலிலே.
தண்ணீர் வருவது நதியிலே.
செடி முளைப்பது மண்ணிலே.
நட்சத்திரங்கள் இருப்பது வானத்திலே.
குழந்தைகள் பிறப்பது பெற்றோருக்கே!
குரங்கு என்பது வால் உள்ளது!"

—அவள் பாடி முடிக்கவில்லை.

"ஏய்! என்ன புதிய புதிய விஷயங்களாகச் சொல்கிறாய்? இதுவரை எனக்குத் தெரியாத விஷயங்களையே சொல்லி விட்டாயே!" என்று தானும் கிண்டல் செய்தாள் சலீமா.

"உனக்கும் தெரிந்த விஷயத்தைப் பாடட்டுமா? இல்லை; தெரிந்தே தீர வேண்டிய விஷயத்தைப் பாடட்டுமா?" என்று கேட்டாள் ஜெபுன்னிஸா.

"எதையாவது பாடு!" என்று சொல்லி விட்டுத் திரும்பிப் படுத்தாள் சலீமா.

"எந்தப் பெண்ணும் தப்ப முடியாதது பருவ உணர்ச்சிக்கே......" என்று பாட ஆரம்பித்தாள் ஜெபுன்னிஸா.

"அதை உன்னோடு வைத்துக் கொள்" என்று கூறி விட்டு, மடமடவென்று கீழே இறங்கி விட்டாள் சலீமா.

மறுநாள் காலையில் அரசரைப் பார்க்கப் போகிறோம் என்ற எண்ணம் அவளுக்கும் இருந்தது. ஆனால் அது அவள் தூக்கத்திற்கு இடையூறாக இருக்கவில்லை.

காலைப்பொழுதில் அந்தக் கனக மணிச் சிலை தன்னை அலங்கரித்துக் கொண்டது. ஜெபுன்னிஸாவும் அப்படியே அலங்கரித்துக் கொண்டாள்.

மகமது, அகமது, பாத்திமா எல்லோருமே அப்படியே.

யாவரும் தங்களை அரசர் ஒரு சிறந்த வணிகக் குடும்பமாகக் கருத வேண்டும் என்ற ஆசையில், அணிமணிகளை அதிகப்படுத்திக் கொண்டார்கள்.

அன்றும் அரசவை மண்டபம் நிரம்பித்தானிருந்தது.

கடந்த ஒரு திங்களாக அரபு நாடுகளிலிருந்தும் இஸ்ரவேலில் இருந்தும் கப்பல்களில் வந்தவர்கள் அனைவரும் அங்கே கூடியிருந்தார்கள்.

தினமும் சிறிது நேரம் அவர்களது காணிக்கைகளைப் பெற்றுக் கொள்வார் அரசர். அதனால் கூட்டம் குறைவாக இருக்கும். முப்பது நாட்களாகத் திரண்டிருந்த கூட்டமாதலின் மண்டபம் நிரம்பி வழிந்தது.

'எல்லோரையும் பார்ப்பதைப் போலவே தங்களையும் பார்ப்பதற்கு, முன்னேற்பாடு எதற்கு? யூசுப் எதற்காக ஓடி ஆடி அனுமதி பெற்றான்?' என்று அலுப்போடு சிந்தித்தாள் சலீமா.

மண்டபத்தின் முன்வரிசையில், எட்டு வரிசைகளுக்குப் பின்னாலேயே அவனும், அவன் குடும்பத்தினரும் அமர்ந்திருந்தனர்.

காவலர்கள், "கேரள சிங்க வள நாடாகிய திருவஞ்சைக் களத்தின் மாமன்னர் மூன்றாம் சேரமான் பெருமாள் வாழ்க!" என்று கோஷமிட்டார்கள். மன்னவர் சேரமான் பெருமாள் கம்பீரமாக உள்ளே நுழைந்தார். அவையினர் எழுந்து மரியாதை செலுத்தினர்.

ஒவ்வொருவர் கையிலும் வகை வகையான பொருள்கள் இருந்தன.

அரசர் வந்து பிரார்த்தனை அரங்கத்தில் நின்றதும் ஒவ்வொருவரும் வரிசையாக வந்து தங்கள் பெயரையும், நாட்டையும், தொழிலையும் சொல்லி காணிக்கையைத் தந்து விட்டுப் போய்விட வேண்டும்.

சேரமான் அருகிலே நாராயண நம்பூதிரியும் கைகளைக் கட்டிக் கொண்டு நின்றார்.

ஒவ்வொருவராக எழுந்து வந்து தங்கள் விபரத்தைச் சொல்லி காணிக்கைகளைச் செலுத்தினார்கள்.

இஸ்ரவேலியர்கள், எகிப்தியர்கள், சிரியன் கிறிஸ்தவர்கள் அனைவரும் வேடிக்கைப் பொருள்களைக் கொண்டு வந்திருந்தார்கள்.

அராபிய வணிகர்கள் மட்டுமே அதிகம் வாசனைத் திரவியங்கள் கொண்டு வந்திருந்தார்கள். அந்தத் திரவியங்களின் வாசனையால் அரசவை மண்டபமே மணம் கமழ்ந்தது.

மகமதுவும் சலீமாவும் தங்கள் நேரம் வந்ததும் பலவகையான பொருள்களையும் கைகளில் சுமந்தவாறு அரசரை நெருங்கினார்கள்.

சேரமான் மற்றவர்களை வரவேற்றது போலவேதான் அவர்களையும் வரவேற்றார்.

அதே புன்னகை. அதே வணக்கம்.

மகமது முதலில் தன் கைகளில் இருந்த காணிக்கைப் பொருள்களை அவரிடம் வழங்கி, தன் பெயர், தொழில், நாடு கூறி வணங்கி விட்டு நடந்தார்.

அடுத்தாற்போல் வந்த சலீமா எதுவும் சொல்ல முடியாமல் தயங்கித் தயங்கி தேகம் நடுங்கியவண்ணம் நின்று கொண்டிருந்தாள். அவள் தானுகச் சொல்லாத விபரங்களை அரசரே கேட்க வேண்டி யிருந்தது.

''பெயர்......?'' என்று கேட்டார் சேரமான்.

சலீமா பயத்தோடு தூரத்தில் நின்று கொண்டிருந்த தன் தந்தையைப் பார்த்தாள்.

மகமது, ''சலீமா'' என்றார்.

''ஊமையா...?'' என்று கேட்டார் சேரமான்.

மண்டபத்தில் இருந்தவர்கள் சிரித்தார்கள்.

வெட்கத்தாலும் பயத்தாலும் சலீமாவின் முகம் வெளிறிப் போயிற்று.

சேரமான் சிரித்துக் கொண்டே கைகளை நீட்டினார்.

தன் கையில் இருந்த வாசனைப் பொருள்களை அந்தக் கைகளுக்கு அளித்தாள் சலீமா.

பயத்தாலும் நடுக்கத்தாலும் அவளது பாதி முகத்தை மூடியிருந்த கருப்புச் சல்லாத்துணி கட்டவிழ்ந்து விழுந்தது.

சேரமான் கைகளில் அவள் வாசனைத் திரவியத்தைத் தந்த போது, அவள் வலது கையில் அணிந்திருந்த மணி ஒன்று தானும் கைநழுவி விழுந்தது.

அப்போது கோவில் மணியொலிக்கும் சத்தம் கேட்டது.

அந்த ஒலி, உடைந்த மணியின் ஒலி போலிருந்தது. (தொடரும்)

**************************************

**கொட்டாவி வருகிறது,**

**ஆளை விடுங்கள் !**

கார்ட்டரைக் கொண்டாட அட்லாண்டா நகர மக்கள் வெற்றி ஊர்வலம் நடத்தினர். கார்ட்டர் குடும்பம் கால் கடுக்க நின்று அந்த அன்பினை ஏற்றது. எத்தனை நேரம்தான் அப்பாவுடன் சேர்ந்து கரமசைத்துச் சாரி சாரியாகச் செல்லும் மக்களுக்கு நன்றி தெரிவிப்பது ! ஒன்பது வயதுச் சிறுமி அமி கார்ட்டருக்குக் கொட்டாவியாக வந்தது. தூக்கம் கண்களைச் சுற்றியது ! படத்தில் கார்ட்டரின் மனைவி ரோஸலின், பிள்ளைகள் சிப், ஜாக் ஆகியோரையும் காணலாம்.





# செயிண்ட் ஜோசப் பப்ளிக் ஸ்கூல்

**கொடைக்கானல் - 624 101**

**( தமிழ்நாடு )**



## பல்வேறு வகுப்புகளிலும் இடங்கள் கிடைப்பதுபற்றிய அறிவிப்பு

மாணவர்களுக்கான இந்த உயர்தர இங்கிலீஷ் போர்டிங் ஸ்கூல் 1977 ஜனவரி 20ம் தேதி குளிர்கால விடுமுறைக்குப் பின் திறக்கப்படுகிறது. பள்ளியாண்டு ஜனவரி தொடங்கி டிசம்பர் வரை. ஸீனியர் கேம்பிரிட்ஜ் (I. S. C.) பரீட்சைக்கு மாணவர்கள் பயிற்சி அளிக்கப்படுகிறார்கள். பெண்கள் ஆறும் வகுப்பு வரை மட்டுமே அனுமதிக்கப்படுவர். பள்ளியில் சேர்வதற்குக் குறைந்த பட்ச வயது 4.

தென்னிந்தியாவின் புகழ்பெற்ற மலைவாசஸ்தலமான கொடைக்கானலில் அமைந்துள்ள இந்த பிரபலமான நிறுவனம் எழில் கொழிக்கும் இயற்கைச் சூழ்நிலையும், ஆரோக்கியமான பருவங்களையும் கொண்டது. பள்ளிக்கூடமும் ஹாஸ்டலும் அதைச் சேர்ந்த பகுதிகளும், கட்டிடங்களும் முழுக்க முழுக்க மேலைநாட்டு முறையில் நவநாகரீகமான வசதிகளைக் கொண்டுள்ளன. சத்தான உணவு (சைவம், அசைவம் எதுவானாலும்) ஐரோப்பிய மேலை நாட்டு முறையில் பரிமாறப்படுகின்றன.

மிகவும் உயர்வான கல்வித்தரம் கொண்டது இப்பள்ளி. நல்ல பண்பாடுகள், சீரிய ஒழுக்கம், முழுமையான வலுவான கல்விப் பயிற்சி ஆகியவற்றின் மூலம் தகுதியும், அதிகாரிகளுக்கேற்ற குண நலன்களும் மாணவர்களுக்குப் போதிக்கப்படுகின்றன. ஒவ்வொரு மாணவனுக்கும் தனிப்பட்ட நேரடியான கவனம் செலுத்தப்படுகிறது.

மாதக் கட்டணம் (உணவு, பள்ளிக்கட்டணம், லாண்டிரிச் செலவு உட்பட) ரூ. 345/- மட்டும்தான். பிராஸ்பெக்டஸுக்கும் ஸீட்டுகள் ரிஸர்வேஷனுக்கும் **எந்த வகுப்பில் அட்மிஷன் தேவை** என்பதற்கும் ரூ. 3/- போஸ்டல் ஆர்டருடன் பள்ளியின் பிரின்ஸிபாலுக்கு ஆங்கிலத்தில் எழுதவும்.

—ராஜி—

## ✻ மகளிர் பகுதி





## மர்மச் சிறுகதைகள்! டிசம்பர் 19உ இதழில் ஆரம்பம்

மர்மச் சிறுகதைப் போட்டிக்கு வந்த ஏராளமான சிறுகதைகளைப் பரிசீலித்து மணியான கதைகளைப் பொறுக்கி எடுத்து வழங்குகிறோம்.

திக் திக்கென்று இதயம் அடித்துக் கொண்டாலும் நெஞ்சைக் கையில் பிடித்துக் கொண்டு படித்து விடுங்கள்!

இப்பகுதிக்குச் சின்னச் சின்னக் கதைகளையும் குட்டிக் கட்டுரைகளையும் மாதர்களிடமிருந்து வரவேற்கிறோம். தகவல் குறிப்பு, வாழ்க்கை அனுபவம், நகைச்சுவைச் சம்பவம் போன்ற எதையும் அனுப்பலாம். பெண் குலத்தை எதிர் நோக்கியுள்ள சமூகப் பிரச்னைகள், சட்டப் பிரச்னைகள், குடும்பப் பிரச்னைகள், மாதர் முன்னேற்றம் பற்றிய கருத்துக்கள், பெண்களின் பொழுதுபோக்கு, விளையாட்டு, அழகு, அலங்காரம், பயன் தரும் கைவேலைகள், சமூகப் பணிகள் முதலியவற்றை அலசலாம். பிரசுரமாகும் அம்சங்களுக்கு வழக்கமான சன்மானம் உண்டு. தவிர, இரு விசேஷப் பரிசுகளையும் அளிக்கிறோம்.

**முதல் பரிசு ரூ 500/- பெறுமானமுள்ள பட்டுப் புடவை.**

**இரண்டாம் பரிசு ரூ 200/- பெறுமானமுள்ள பிரஷர் குக்கர்.**

இப் பரிசுகளை அடுத்த ஆறு மாதங்களில் கல்கியில் பிரசுரமாகும் கதை கட்டுரை முதலியவற்றை மகளிராக அமைந்த குழுவினர் பரிசீலித்து இரு பெண்மணிகளுக்கு வழங்குவார்கள்.

குறிப்பு: ○ உறையின் மேல் மகளிர் பகுதி எனக் குறிப்பிடவும். ○ பிரசுரத்துக்கு ஏற்காத கதை கட்டுரை முதலியவற்றைத் திருப்பி அனுப்ப இயலாது. ○ கடிதப் போக்குவரத்து இடையாது. ○ கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. ○ விலாசம்: ஆசிரியர் கல்கி, சென்னை 600 031.



எனக்கு இந்த விஷயம் தெரியவே தெரியாது என்கிற சின்ன நம்பிக்கைதானே அவளை நடமாடவாவது வைத்திருக்கிறது. அந்த நம்பிக்கையையும் தகர்த்து விட்டால் அவளால் தாங்கிக் கொள்ளவே முடியாமல் போய் விடுமோ என்கிற பயம் அவளுக்குச் சமாதானம் சொல்வதிலிருந்து என்னைத் தடுக்கிறது.

அம்மா, அழாதேம்மா. ஒன் அழுகையை என்னாலே தாங்கிக்கவே முடியாதும்மா. வாழ்க்கையில் எல்லாத்தையும் இழந்துட்ட எனக்கு ஒரே துணை, நம்பிக்கை, நீயும் அப்பாவுந்தானே? நீங்களும் கலங்கினா எனக்கு மனசே சுக்கு நூறாயிடறது. எனக்காக நீங்க படற கஷ்டங்களை நெனைச்சு நெனைச்சு நான் உருகறேன். பெண்ணைப் பெத்த அப்பா அம்மாவுக்கு ஆத்ம திருப்தியே அந்தப் பெண்ணுக்கு நல்ல இடத்திலே கல்யாணமாகி, அவ சந்தோஷமா வாழறதைப் பார்க்கறது தான். விதி என் வாழ்க்கையிலே விளையாடிய விளையாட்டு — அந்தத் திருப்தியை என்னாலே உங்களுக்குத் தர முடியாமல் போயிடுத்து.

அப்பா எப்பவுமே பரம சாது. இந்த வீட்டைக் கட்டிக் காத்துக் குடும்பச் சுமையை யெல்லாம் நீ தாம்மா தாங்கிண்டு போறே. மன தைரியம் அதிகமான நீயே கலங்கறதைப் பார்க்கறப்போ நேக்கு ரொம்பக் கஷ்டமா இருக்கு. அப்பாவும் நீயும் ஒரே பெண்ணான என்னை ஆசையோடு வளர்த்த அந்த நாட்கள்,

# கண்ணன்

அம்மாவைப் பார்க்கவே நேக்குக் கஷ்டமா இருக்கு. அடிக்கடி என்கிட்டே ஏதோ பேசணும்னு நெனைச்சுண்டு பக்கத்துலே வறா. பயந்துண்டு திரும்பிப் போயிடறா. சாதாரண வீட்டு விஷயங்களைப் பத்திக் கேட்கிறப்பக் கூட என்னோட கண்களைச் சந்திக்கத் திராணியில்லாமல் அவள் பார்வை தரைக்குப் போறது. நான் வெளியிலே போயிருக்கேன், அல்லது தூங்கறேன்னு அவ நெனைச்சுண்டிருக்கிற சில வேளைகளில் ரூமிலே போய் உக்காந்துண்டு குமுறிக் குமுறி அழறா. மனுஷன் பண்ணாத மகா பாதகத்தைத் தான் செய்துட்ட மாதிரி அவ நடுங்கறதும் தடுமாறறதும் பார்க்கப் பரிதாபமா இருக்கு. 'அம்மா! நீ செய்தது எல்லா மனுஷாளும் பண்றதுதான். அதிலே கொஞ்சங் கூடத் தப்பே கிடையாது. அப்படி நீ ஒரு வேளை எனக்கு மனசாறத் தப்புப் பண்ணினாக் கூட அந்த ஏத்துக்க வேண்டியவதானே நான்? கவலையை மறந்து சந்தோஷமா இரும்மா' என்று சொல்லி அவள் கண்ணீரைத் துடைக்க என் கை துடிக்கிறது. ஆனால் வருகிற கொஞ்ச சம்பளத்திலே மிச்சம் பிடித்துச் சேர்த்த உன் சாமர்த்தியம், வரதட்சிணையை வாரிக் கொடுத்து பாங்கிலே ஆபீசராக இருந்த அவருக்கு என்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்த உங்கள் ஆசைகள், ஊருக்கே பந்தி வைத்து நீங்கள் நடத்திய என் கல்யாணம், புக்காத்துக்கு நான் போறப்போ நாங்க ரெண்டு பேரும் நமஸ்காரம் பண்றபோது, கண்களில் பொங்கும் கண்ணீரை அடக்கிக் கொண்டு, தன் மகளுக்கு நல்லதொரு வாழ்க்கையைக் கொடுத்து விட்டோம் என்கிற சந்தோஷம் பூரிக்க விடை கொடுத்த உங்கள் பாசம் — நெனைக்க நெனைக்க நெஞ்சு நெறையறது.

தனிக் குடித்தனம் போன புதுசில், ஆசையோடும் அன்போடும் நான் வாழ்ந்த அந்த ஆறு மாசங்கள்... 'இனிமேல் உலகமே சொர்க்க போகமாக இருக்கப் போகிறது என்ற கனவுகளோடு நான் ஓட்டிய அந்த நாட்கள்... கனவுகள் கனவுகளாகவே ஆகி விட்டன. இவருடைய நண்பர் ஒருவரின் கல்யாணத்துக்காக நாங்கள் திருநெல்வேலிக்

குப் போனேனும். சுழித்தோடும் தாமிரபரணி ஆற்றைப் பார்த்தவுடன் நீந்த வேண்டும் என்று இவருக்கு ஏற்பட்ட அந்த விபரீத ஆசை... ''போய்ட்டு வரேன் கண்ணம்மா'' என்று என் கன்னத்தை இலேசாகத் தட்டி விட்டுத் தண்ணீரிலே குதித்தார். அதற்கப் புறம் அவரை நான் பார்க்கவில்லை; அவர் உடலைத்தான் பார்த்தேன். சுற்றி நடப்பதே சரியாகப் புரியாமல் பிரமை பிடித்தது போலானது எனக்கு. அவருடைய வயதான அப்பா அம்மா வந்தார்கள். நீங்கள் வந்தீர்கள். எங்கே நீ அழுதால் என்னுடைய வருத்தம் அளவு மீறிவிடுமோ என்று பயந்து உன் அழுகையைப் பல்லைக் கடித்துக் கட்டுப் படுத்திக் கொண்டு இருந்தாயே, அம்மா? ஆனா சதா சர்வ காலமும் உன்னோட இருதயம் எனக்காக அழறது எனக்கு நன்னாத் தெரியும். சோக நெருப்பை நீ மூடிவைச்சுக் சாம்பலாறதை என்னாலே புரிஞ்சுக்க முடியறது. இப்படிப்பட்ட ஒன்னை எதுக்காக, எப்படீம்மா நான் தப்பா நெனைப்பேன்? நீ இப்போ வருத்தத்தோடே பயமும் சேர்ந்து நெஞ்சை உறுத்த மாஞ்சு போயிண்டிருக்கே.

எனக்குக் கொஞ்ச நாளாகவே சந்தேகம் தாம்மா. ரெண்டு மாசமா நீ அந்தப் பக்கம் ஒக்காரவே இல்லே. ஒரு நாள்'' இந்த மாதாந்தரச் சனியன் எனக்கு விட்டுடுத்து போலிருக்கு'' என்று நீகூட என் கிட்டே சொன்னயே? ஆனா, சோர்ந்து சோர்ந்து நீ ரூமிலே போய் ஒக்காரறதையும் நாலஞ்சு நாட்களாகக் காலையிலே வாந்தி எடுக்கறதையும் பார்த்தப்போ சந்தேகமா இருந்தது. நேத்திக்குச் சாயந்திரம் நீ ஜானுப் பாட்டியோட பேசிண்டிருக்கறதைக் கேட்டப்பதான் சந்தேகம்

''தப்பு நடந்துடுத்து பாட்டி. [illegible] மாசமும் இந்த மாசமும் நான் [illegible] வயசு நாற்பத்தைந்தைத் தாண்டி[illegible] தச் சனியன் ஒரேயடியா விடப் போற[illegible] நெனச்சேன். ஆனா உடம்பை [illegible] டறது. ஒரு வாரமா வாந்தி எடுக்க [illegible] இத்தனை வருஷத்துக்கப்புறம், இந்த [illegible] யான இக்கட்டான நிலையிலே [illegible] இருக்கறப்போ நான் மாசமா [illegible] போறேனுன்னு பயம்மா இருக்கு.''

''லட்சுமி, விஷயமே நிச்சயமாத் [illegible] முன்னாடி ஏண்டி பயப்படறே? நம்ம [illegible] மையைப் பார்த்தயா?''



# வருவான்

## அம்பாமூர்த்தி

நெஜமாகவே சந்தோஷப்படக் கூடிய செய்திதான்னு எனக்குத் தெரிஞ்சுது. ஞாயிற்றுக் கிழமைதான் நாகராஜா கோவில்லே விசேஷமாச்சே? சாயங்காலம் தீபாராதனைக்குப் போயிருந்தேன். வீட்டுக்குத் திரும்பி வந்து, முன் ரூமிலே நுழைஞ்சவுடனே நீயும் ஜானுப் பாட்டியும் அடுக்களையிலே மெள்ளப் பேசிக்கற சப்தம் கேட்டது. நீ சொன்னே, ''பாட்டி, நாலஞ்சு நாளா ஒங்க கிட்ட இந்த விஷயத்தைச் சொல்லணும்னு பாத்துண்டிருக்கேன். எப்படி ஆரம்பிக்கிறதுன்னு தெரியலே. இன்னிக்குக் கமலி கோயிலுக்குப் போயிருக்கா. வரக் கொஞ்ச நாழியாகும். அதுக்குள்ளே என்னோட ஆதங்கத்தைச் சொல்லிடறேன்.''

''அப்படி என்னம்மா லட்சுமி ஒனக்குக் கஷ்டம், கமலிக்குக்கூடத் தெரியாம மறைக்கும்படியா?''

''பாட்டீ, டாக்டர்கிட்டே போனா எங்கே நான் பயப்படறது நெஜம்னு அவ சொல்லிடுவாளோ என்கிற நிலையா இருக்கு. வருஷக் கணக்கா வாழவேண்டிய கமலி கல்யாணமான ஆறுவது மாசம் எல்லாத்தையும் இழந்துட்டு வந்து நிக்கறா. வாழ்க்கைங்கிறது என்னது, புருஷ ஸ்திரீ சம்பந்தங்கள் என்னன்னு இந்த ஆறு மாசத்திலே தெரிஞ்சுக்கக்கூடச் சந்தர்ப்பம் கெடச்சதோ இல்லையோ, தெரியலே. அந்தச் சின்னச் செடி கருகி நிற்கிறப்போ வளர்ந்து நிக்கற இந்தக் கெழட்டு மரம் பூத்துக் குலுங்கினா என் கமலி எங்களை என்ன நெனைப்பா சொல்லுங்கோ பாட்டி? அவளோட கஷ்டங்களுக்கு நாங்க கண்ணை மூடிண்டு எங்களோட சொகங்களை யெல்லாம் முழுக்க அனுபவிக்கிறதா அந்தச் சின்ன மனசுலே ஒரு சிறுதல் விழுந்துட்டா, அதை எங்க ரெண்டு பேராலேயும் தாங்கிக்கவே முடியாது. நேத்தி ராத்திரிதான் இந்த



''நீர் ஜோஸியம் சரியாகச் சொல்லி விடுவீரா? இந்தாரும் உம் ஃபீஸ் ஐந்து ரூபாய். இன்றைய கால்பந்துப் போட்டி தொடங்கு முன்னரே ஸ்கோர் என்னவென்று சொல்லி விடும் பார்க்கலாம்.''

''ஆட்டம் தொடங்கு முன்னர் ஸ்கோர் 0-0.'' — லலித்

---

விஷயத்தை இவர்கிட்டச் சொன்னேன். ஒங்களுக்கும்தான் இவரைத் தெரியுமே? என்னளவு தைரியம்கூடக் கிடையாது. இடி விழுந்தமாதிரி நிக்கறார். யார்கிட்டேயாவது சொன்னா மனசு சாந்திப்படுமேன்னு சபலம். சொல்லிட்டேன் பாட்டி ஒங்ககிட்ட.''

''கவலைப்படாதே. பீமனசேரி அம்மனுக்கு வேண்டிக்கோ. மலையா வர்ற கஷ்டம் அலையாய்ப் போயிடும். நீ நாளைக்குக் காலம்பறத் தாயம்மைகிட்டப் போ. அவ நீ கர்ப்பமா இருக்கியா இல்லையான்னு சொல்லுவா. அப்புறம் வேண்டியதைப் பார்த்துக்கலாம். இப்போ சும்மா மனசைப் போட்டு அலட்டிக்காதே.''

''அம்மன்தான் காப்பாத்தணும் பாட்டி.''

உங்க பேச்சு என் காதிலே விழுந்த அந்த நிமிஷத்திலே கூட உன்னையும் அப்பாவையும் நான் தப்பா நெனைக்கலேம்மா. எனக்காக ஒவ்வொரு விநாடியும் நீங்க விடற இரத்தக் கண்ணீர் எனக்குத் தெரியும். இந்த உங்களுடைய தீராத சோகத்துக்கும் சாதாரண தாம்பத்தியத்துக்கும் ஏம்மா முடிச்சுப் போட்டு மனசைக் கொன்னுண்டிருக்கே? என்னோட வாழ்க்கை இப்படி ஆயிடுத்துன்னா அது என் தலையெழுத்து. அதுக்காக நாப்பது வயசே ஆன நீ சந்நியாசியாக முடியுமா? நான் ஆத்துலே இருக்கிற இந்த எட்டு மாசமா ஒரு குத்த உணர்வு என்னை உறுத்திண்டே இருந்தது. எனக்காக நீங்க கண்ணீர் விடலாம், வருத்தப்படலாம், ஆனா என்னை நெனச்சு நெனச்சு உங்க வாழ்க்கையையே மறக்கலாமா? என் வாழ்க்கையோ போயிடுத்து. ஒங்களோட தாம்பத்திய வாழ்க்கையும் இல்லாமல் போயிடறதுக்கு நான் காரணமாயிட்டேனேன்னு நெனச்சு பயந்திண்டிருந்தேன். இப்பத்தாம்மா கொஞ்சம் நிம்மதியா யிருக்கு. மனசு சந்தோஷப்படறதும்மா. எனக்கு ஒரே ஒரு வருத்தம்தான். அவரைப் பிடுங்கிண்ட தெய்வம் அந்த வம்சத்தோட ஒரு வித்தையாவது என் வயத்துலே விட்டுட்டுப் போயிருக்கலாம். நம்ப ஆசைப்பட்டு என்ன பிரயோசனம்? தலையெழுத்தும்மா. எனக்கு அழுகை பொங்கிண்டு வறது. நான் வீட்டுக்குத் திரும்பி வந்ததும் உங்க பேச்சைக் கேட்க முடிஞ்சதும் உனக்குத் தெரிஞ்சுடப்படாதே. மெள்ளக் கோவிலுக்குப் போறேன். அம்மன் சன்னதியில் என்னோட கவலைகளையும் கண்ணீரையும் சமர்ப்பிக்கிறேன்.

பொழுது விடியறது. காலம்பற எழுந்திருந்தே ஏதோ முள்ளில் உக்காந்திருக்கிற மாதிரி இருக்கே நீ. சாயந்திரம் நாலு மணியானவுடனே எங்கிட்டே வறே. ''கமலி, கடைக்குப் போயிட்டு வறேம்மா'' என்கிறே. எனக்குச் சிரிப்பு வறது. உங்கிட்டக் கேக்கணும் போல இருக்கு: ''அம்மா, நன்னாப் பொய் சொல்றியே, நீ இப்போ கடைக்குப் போறியா, இல்லே லேடி டாக்டர் தாயம்மை கிட்டே போறியா?''

வீட்டுக்குத் திரும்பி வறப்ப உன் முகத்திலே ஒரே கலவரம். எனக்குப் புரிந்து விட்டது. உன் சந்தேகத்தை டாக்டர் ஊர்ஜிதம்செய்து விட்டார். உனக்குக் குழந்தை, எனக்குத் தம்பி பிறக்கப் போறும்மா. ஆனா என்னோட சந்தோஷத்தை எப்படி உன்னோட பகிர்ந்துக்கறது. உன் ரகசியம் எனக்குத் தெரிஞ்சுட்டுதா எப்படி உங்கிட்டத் தெரிவிக்கிறதுன்னு எனக்குப் புரியலே.

குத்து விளக்கை ஏத்தி வெச்சுட்டுச் சாமி முன்னாலேயே நீ ஒக்காந்துண்டிருக்கே. வாண்டுகள் விளையாடறதை, யாரெல்லாமோ ரோட்டிலே வறதை போறதை நான் வேடிக்கை பார்த்துண்டிருக்கேன். மணி ஏழாறது.... கரெக்டா தினப்படி டைமுக்கு அப்பா வரார்; காப்பி குடிக்கிறார்.

''கமலி, நேக்கு ஒடம்பு அவ்வளவு சரியா இல்லேம்மா. சீக்கிரமாச் சாப்பிட்டுத் தூங்கலாமா?''ன்னு கேக்கறே. ஒன்பது மணிக்கு எல்லாரும் படுத்துக்கறோம். எனக்குத் தூக்கம் வரலே. காரணமேயில்லாம மனசு குறுகுறுக்கறது. அம்மா எப்படி இந்த விஷயத்தை அப்பா கிட்டச் சொல்லப் போறா? அவர் எப்படி எடுத்துப்பார்?

''கமலி, கமலி...''

பதிலே சொல்லாம நான் கண்ணை மூடிண்டு படுத்திண்டிருக்கேன்.

''கமலி நன்னாத் தூங்கறா. நீங்க அடுக்களைக்கு வாங்கோ.''

அப்பாவும் அம்மாவும் சத்தமே எழுப்பாமல் படுக்கையிலிருந்து எழுந்து போறா. அவா ரகசியமா மெல்லப் பேசற சப்தம் எனக்கு இலேசாகக் கேக்கறது.

''லட்சுமி, டாக்டர் என்ன சொன்னா? லட்சுமி...அழாதே... சத்தம் கேட்டா கமலி முழிச்சுக்கப் போறா.''

''தாயம்மை டெஸ்ட் பண்ணினா. இது ரெண்டாவது மாசமாம். எவ்வளவோ மனசைக் கட்டிக் காப்பத்தறோம். ஒரு நிமிஷத்திலே நமக்கு அன்னிக்கு ஏற்பட்ட சபலம்... பார்த்தேளா? கமலி மூஞ்சியைப் பார்க்கவே வெக்கமா இருக்கு. ஆசையா ஒரே பொண்ணு பூவையும் பொட்டையும் இழந்துட்டு வந்த ஆறுவது மாசமே இந்தப் பாழும் உடம்புக்கு ஆசை வந்துடுத்து. கடவுளே? எம் பொண்ணு என்னைத் தப்பா நெனைக்காம இருக்கணுமே?''

''லட்சுமி, நான் சொல்றேன்னு தப்பா நெனைக்காதே. ஏதோ மனசு திடமில்லாத வேளையிலே, பலாபலன்களை ஆலோசிக்காம நாம இதைச் செஞ்சுட்டோம். கமலிக்கு நம்மை விட்டா ஆதரவு இல்லே. நமக்குக் கொழந்தை பொறக்கப் போறது என்றவுடனே, அப்பா, அம்மா நம்பகிட்டே உசிரையே வெச்சிருக்கான்னு நெனச்சோமே, நம்ப வருத்தங்களை விட அவாளோட சுகங்கள்தான் அவாளுக்கு முக்கியமாயிடுத்துன்னு கொழந்தை நெனச்சிட்டா அவ மனசை வாழ்நாள் முழுக்கத் தேத்தவே முடியாது. அதனாலே லட்சுமி... நமக்குப் பிடிக்கலைன்னாலும் அபார்ஷன் பண்ணிக்கறதுதான் எனக்குச் சரியாப் படறது.''

தமிழ் இலக்கிய வானிலே ஒரு துருவ நட்சத்திரம்!

# சிறுவர் சிறுமியர்

## கலைக்களஞ்சியம்

**அறிவித்திறன் பெற வாய்ப்பளிக்கும்**
**அதே வண்ணக்களஞ்சியம்**

பிரபஞ்ச இயல், உயிரியல், புராதன இயல், விலங்கியல், மனித இயல், தாவர இயல், பறவை இயல் மற்றும் பல கணக்கற்ற ஜீவன்களின் இயல் பற்றிய உரை விளக்கமும் எண்ணற்ற வண்ண ஓவிய விளக்கங்களும் ஒருங்கே அமைந்த உன்னத சித்திரக்காவியம்.

மற்றும் நவீன விஞ்ஞான சாதனைகள், வீரசாகஸ அற்புதங்கள், கலைத்துறை விளக்கங்கள், விளையாட்டுப் பந்தயங்கள் முதலிய பல்வேறு விவரங்கள், பல்வர்ணப் படங்களோடு அற்புதமாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன.

கற்காலம் முதல்.....
வைக்கிங் காலம் வரை

தேவையான விவரங்கள் அனைத்தையும் அரிய விளக்கங்களுடன் இடம் பெற்றுள்ள புதுமைப்படைப்பு!
விலை ரூ. 25/-

MCA-1-76TAM

**M** **தி மாக்மில்லன் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்**
6 பட்டுள்ளாஸ் சாலை சென்னை-600 002



# கண்ணாடியின்றி கண் பார்வை பெறலாம்!



**உங்கள் கண் வைத்தியரை ஆலோசனைக்கு அணுகுங்கள்**

உங்களுக்கு இதைவிட மட்டற்ற மகிழ்ச்சி தரக்கூடிய ஒரு செய்தியும் வேறு உண்டோ!

**'காண்டாக்ட் லென்ஸ்'களை உபயோகியுங்கள்.**

இந்த காண்டாக்ட் லென்ஸ்'கள் கிட்டப்பார்வை, தூரப்பார்வை மற்றும் அப்பாகிக் (காடராக்ட் ஆப்ரேஷனுக்குப்பின்) கெராடோ கோனஸ், அனிஸோமெட்ரோபியா, அனிஸிகோனியா, பாலியோபியா, போன்ற பார்வை குறைபாடு உடையவர்களுக்கு மிகவும் சிறந்தது.

'காண்டாக்ட் லென்ஸ்'களை வெகுசுலபமாக நீங்களே உங்கள் கருவிழிகளில் பொருத்திக்கொள்ளலாம்... சுற்றியும் விடலாம்—சில நாட்கள் பழகிய பின்! உங்கள் விழிகளில் பொருத்தப்பட்ட இச்சிறு 'காண்டாக்ட் லென்ஸ்'கள் மற்றவர்கண்களுக்கு தெரியாது. ஆகவே உங்கள் எழில் மிகு முகத் தோற்றத்தில் எவ்வித மாறுதலும் இல்லை!

மற்ற விபரங்களுக்கு **ஆசியா காண்டாக்ட் லென்ஸ் லாபரெட்டரி**
4/1, ஆண்டர்ஸன் ரோடு,
சென்னை-600 006. போன்: **87865**

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"வீணு விகார்" — 17-A, ஃபிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்- 400 022
டெலிபோன்: 471455
தந்தி: "GROWRICH" தபால் பெட்டி 6759

**ஏலம் கேட்டபிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட**

**1976 டிசம்பர், புதிய குருப்புகள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | மாதங்கள் | ஏலத் தேதி |
|---|---|---|---|---|
| STB | ரூ. 100/- | ரூ. 2500/- | 25 மாதங்கள் | 12-12-76 |
| STC | ரூ. 50/- | ரூ. 1250/- | 25 மாதங்கள் | 12-12-76 |
| STF | ரூ. 25/- | ரூ. 625/- | 25 மாதங்கள் | 12-12-76 |
| LTM | ரூ. 50/- | ரூ. 2000/- | 40 மாதங்கள் | 12-12-76 |
| LTG | ரூ. 125/- | ரூ. 5000/- | 40 மாதங்கள் | 19-12-76 |
| LTF | ரூ. 250/- | ரூ. 10000/- | 40 மாதங்கள் | 26-12-76 |
| LTE | ரூ. 500/- | ரூ. 20000/- | 40 மாதங்கள் | 26-12-76 |

தலைமை ஆபீஸ் & ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:
**"பாலுஸேரி பில்டிங்ஸ்"**
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005
கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டில்லி & கோயமுத்தூர்

இலவசப் பிரசுரத்திற்கு எழுதுங்கள்
**சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது**

வேலை செய்யும் நேரங்கள்:
*காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை*

**வார விடுமுறை: திங்கட்கிழமை**

ஸ்தாபிதம்: 1947

**30 YEARS**

எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

# 'ஆரெஸ்கே'யும் 'ஆசானு'ம்!



மைக்கில் வெற்றி பெற்றவர்களைப் பற்றிய அறிவிப்புக்கள் ஒலித்தன: ''ட்ரிபிள் ஜம்ப் - ஆர்.எஸ்.கே. -சுப்பையா, ஷாட்புட் - ஆர். எஸ். கே. கிஷோர், தட்டு வீசுவ - ஆர். எஸ். கே. 'பெண்கள் நூறு மீட்டர், 200 மீட்டர், 400 மீட்டர் பந்தயங்கள் - ஆர். எஸ். கே. ஆனந்தி...!''

''என்ன இது! தங்கப் பதக்கங்கள் அனைத்தையும் ஆர். எஸ். கே. அடித்துச் சென்று விடும் போல் இருக்கே:'' என்று இதர பள்ளிகளைச் சேர்ந்தவர்கள் அங்கலாய்த்தனர். ஆசான் மெமோரியல் பள்ளி மாணவர்கள் கைதட்டி காட்டிய உற்சாகத்தின் விளைவாக அப்பள்ளி இரண்டாவது ஸ்தானத்தை பெண்கள் சாம்பியன் ரீதாவை பெற்றது.

பெரம்பூர் ரயில்வே மைதானத்தில் இரண்டாவது தென்னிந்திய விளையாட்டுப் பந்தயங்களில் மகாராஷ்டிரம், கர்நாடகம், ஆந்திரம், கேரளம், தமிழகத்தைச் சேர்ந்த இருபத்தி நான்கு உயர் தர பள்ளிகளின் 427 மாணவ மாணவிகள் கலந்து கொண்டனர் திருச்சி ஆர். எஸ். கே. உயர்நிலை பள்ளி மாணவ மாணவிகள் 121 பாயின்ட்கள் பெற்று 'டீம் சாம்பியன்' பட்டம் அடைந்தனர். ஆர். எஸ். கே. உயர்தரப் பள்ளியின் மாணவன் எஸ். சுப்பையா சாம்பியன் பட்டம் பெற்றான்.

திருச்சி கனரக மின் தொழிற்சாலையில் இயங்கும் ஆர். எஸ். கே. உயர்தரப் பள்ளியின் பிரின்ஸிபால் ஸ்டீபனின் மகிழ்ச்சிக்குக் கேட்க வேண்டுமா?

உடற்பயிற்சி ஆசிரியர்கள் பாட்ரிக், ஜோசப் ஆகியோருக்கும் பெருமையில் பங்குண்டு. ஓட்டப்பந்தய விசேஷ நுணுக்கங்களை மாணவ மாணவிகளுக்கும் போதித்தவர் 'கோச்' கிருஷ்ணசாமி. -குண்டுமணி

---

என்ன அசட்டுத்தனமான முடிவுக்கு வந்து கொண்டிருக்கிறீர்கள் அப்பா?

''எனக்கும் வேறெ வழியே தெரிய மாட்டேங்கறது. அவசரமா நாம முடிவெடுக்க வேண்டாம். நெத்தியிலே பிரசாதத்தை இட்டுண்டு படுத்துக்கறேன். பொழுது விடியறப்ப அந்த அம்மன் மனசுக்குத் தெளிவு குடுக்கறுளா, பார்க்கலாம்.''

அம்மா! எனக்காக வயத்திலே வளர்ற அந்தச் சிசுவை நீங்க கொல்றதுக்கு நான் விடவே மாட்டேன். ஆனா, எனக்கு விஷயம் தெரிஞ்ச மாதிரி நான் எப்படிக் காட்டறது? என் மனசுக்குள்ளே ஆயிரம் சர்ப்பங்கள் அங்குமிங்குமாக ஓடுகின்றன. விடியப்போகும் பொழுதே! அம்மாவுக்கும் எனக்குமாகச் சேர்த்து நல்லதொரு பதிலைத் தரமாட்டாயா?

எப்பத் தூங்கினேனோ தெரியலே. கண் முழிக்கறப்பக் காலம்பற மணி ஆறரை ஆயிடறது. பல் தேய்க்கப் போறேன். அம்மா கிணத்திலேருந்து தண்ணி இறைச்சிண்டிருக்கா.

''அம்மா!''

''கமலி...''

''அம்மா, நேக்கு ஒங்கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்மா.''

என்னவென்றே புரியாமல் அம்மா என்னைப் பார்க்கிறாள்.

''காலம்பற நான் ஒரு சொப்பனம் கண்டேம்மா. அதிலே அவர் வந்தார். எங்கிட்ட ரொம்ப நேரம் பேசினார். போறப்போ என்ன சொன்னார், தெரியுமா? கவலைப் படாதே கமலி, இன்னும் கொஞ்ச நாளிலே நம் வீட்டிலேயே திரும்ப வந்து பொறக்கப் போறேன்னார்ம்மா. அம்மா, விடியற்காலம் காண்கிற கனவு பலிக்கும்னு சொல்லுவாளே. என்னோட கனவு, மனசார வேண்டிக்கிற ஆசை நெஜம்மா நடக்குமாம்மா? உன்னாலே தான் இதுக்குப் பதில் சொல்ல முடியும். சொல்லும்மா... சொல்லும்மா...''

''கமலீ.... கமலீ....''

தன்னையே நம்ப முடியாத ஆச்சரியத்தில் தன் குழப்பங்களுக்குத் திடீரென வந்து விட்டதாகத் தோன்றும் தெளிவில் என் கைகளை அழுத்தமாகப் பற்றி இறுக்குகிறாள் அம்மா.

என்னுடைய கனவு அம்மாவைத் தேற்றுவதற்காக நான் கற்பித்த ஜோடனையாக இருக்கலாம். ஆனால் உண்மையாகவே அது நடக்க முடியுமானால்.... அம்மாவின் வயிற்றிலே அவர் வந்து மீண்டும் பிறக்க முடியுமானால்... அந்தச் சின்னக் கண்ணனோடு கொஞ்சி விளையாடி அவன் மோகனச் சிரிப்பிலே என் கவலைகளை நான் கொஞ்சமாவது மறக்க முடியாதா?




ஜெய்சங்கர்தான் வாயில்லாப் பூச்சி. தன் அண்ணன்மார்கள் இருவருக்கும் கல்யாணம் நடந்து முதல் இரவும் நடப்பதைப் பார்த்து வாயில்லாப் பூச்சியான ராமு வேதனைப்படுகிறான்; அவன் கையையும், காலையும் முறித்துக்கொண்டு என்னென்னவோ மாதிரியெல்லாம் அந்த வேதனையை வெளிப்படுத்துவது ரொம்பவும் அசிங்கம்! இதை எப்படிச் சினிமாப்படத் தணிக்கையாளர்கள் அனுமதித்தார்கள்?

அண்ணன்மார்களுக்கு விவாகமாகி மனைவிமார்கள் வந்தது வாயில்லாப் பூச்சிக்குப் பொறுக்கவில்லையாம். ஒரு கழைக்கூத்தாடிப் பெண்ணை முரடர்களிடமிருந்து காப்பாற்றி விடுகிறானாம். அந்தச் சமயம் அவனை மறைவாகக் கவனித்துக் கொண்டு தொடர்ந்து வந்த தகப்பனார் அந்தப் பெண்ணை வீட்டுக்கு அழைத்துப் போய் விடுகிறாராம். அதற்குப் பிறகு அப்பாவும், அம்மாவுமாக மகனுடைய காதல் லீலைகளை மறைவிலிருந்து பார்த்து மகிழ்கின்றனராம். பின்னர் வாயில்லாப் பூச்சிக்குத் திருமணம். இதற்குப் பிறகு திரைக் கதைக்கு என்னென்னவெல்லாமோ நேர்ந்து விடுகிறது!

வாயில்லாப் பூச்சிக்குப் பேசத்தான் முடியாதே தவிர, கண் நன்றாய்த் தெரியுமே! அப்பாவும் அம்மாவும் 'பே' என்று விழித்துக் கொண்டு விறைக்க, விறைக்கத் தன் காதல் லீலையைப் பார்த்துக் கொண்டேயிருப்பது ஒருமுறை கூடவா கண்ணில் படாமல் போய் விடும்! அதுதான் போகட்டும், வித்தை காட்டும்போது ஜெய்சங்கரின் டூப் சமாசாரம் நன்றாய்த் தெரிகிறதே. அனுபவம் மிகுந்த டைரக்டர் இதைக் கவனித்திருக்க வேண்டாமோ?

திரைக் கதை, வசனம், டைரக்ஷன் யாவும் கே. எஸ். கோபாலகிருஷ்ணனுடையவை. வசனம் வரம்புக்கு மீறிப் போய் விடுகிறது! கொஞ்சம் குறைத்திருக்கலாம்.

மேஜர் சுந்தரராஜன், வரலக்ஷ்மி இருவரும் 'வாயில்லாப் பூச்சி'யின் பெற்றோர்களாக வந்து படத்துக்குக் களையூட்டுகின்றனர். அருளானந்தம், வாயில்லாப் பூச்சியின் தவிப்பைப் பார்த்துப் படபடப்புடன் தவிக்கும் மனைவியை அவ்வப்போது சமாதானப்படுத்தும் கட்டங்களிலும், கடைசியில் நோய் வாய்ப் பட்டுக் கிடந்தபோதும் மேஜரின் நடிப்பு சிறப்பாயிருக்கிறது. வரலட்சுமி குடும்பப் பாங்காக நன்றாய் நடிக்கிறார்.

பிரமீளாவுக்குப் பழகிப்போன சண்டிப் பெண்ணின் பாத்திரம். ராணி அவருக்குத் துணை நிற்கிறார்.

பொறுமையைச் சோதிக்க மூன்று பாடல்கள் இருக்கின்றன. போதாதா? கலை நுணுக்கங்கள் எதுவும் இல்லை.

கழைக் கூத்தாடியின் மகள் அமிர்தமாக வரும் ஸ்ரீப்ரியா, பணக்கார வீட்டு மருமகளாக வந்த பிறகு மனத்தில் பதியும் வண்ணம் பாத்திரத்தை உணர்ந்து நடித்திருக்கிறார். துடுக்கும் மிடுக்குமாக நடித்துப் படத்துக்கு ஓரளவு சுவையூட்டியிருப்பதே ஸ்ரீப்ரியாதான்!



# வாயில்லாப் பூச்சி



நாடக பாணிக் கதைகளிலிருந்து நம் படாதிபதிகளால் விடுபட முடியவில்லையே!

தமிழ்ப் படம் பார்ப்பவர்களை வாயில்லாப் பூச்சி என்று நினைத்து விட்டார்களா?

— கார்த்தன்

# சிலம்புச் செல்வம்

**ம.பொ.சி**



கோசிகன் மாதவிக் கொடியைப் பார்த்துக் கூறியது, பூம்புகார் மாதவியை நினைப்பூட்டியது கோவலனுக்கு.

மாதவியின்பால் சினங் கொண்டு அவளை விட்டுப் பிரிந்தான் என்றாலும், அவன் உள்ளத்தில் எங்கோ ஓரிடத்தில் அவள் இருந்து கொண்டுதான் இருந்தாள். அதனால் மாதவி துன்புறுகிறாள் என்று கோசிகன் கூறியது அவனது உள்ளத்தை உலுக்கி விட்டது. ''மாதவிக்கு என்ன நேர்ந்தது ?'' என்று அவன் கோசிகனைக் கேட்டான். 'இவன் தான் கோவலன், கண்டு பிடித்துவிட்டேன்' என்று கூறிக் கோசிகன் பெருமிதமடைந்தான்.

கோவலன் புகாரைவிட்டுப் புறப்பட்டபின், அவனுடைய பெற்றோர் பெறுதற்கரிய மணியினை இழந்த நாகம் போல் வாடினர் என்றும், நெருங்கிய சுற்றத்தினர் எல்லாம் உயிர் இழந்த உடல் போல் துயரக் கடலிலே அழுந்தினரென்றும், கோவலனுடைய தந்தையான மாசாத்துவான், ''திக்கெட்டினும் தேடி, என் அருமை மகனைக் கண்டுபிடித்துக் கொண்டு வாருங்கள்'' என்று கூறி ஏவலாளர்களை அனுப்பிய தனையும் கோவலனிடம் கூறி, ''இராமன் பிரிந்த பின்னர் அயோத்தி எந்த நிலையில் இருந்ததோ, அது போன்று புகார் நகரம் இருக்கின்றது'' என்றான் கோசிகாமணி. இதனை அவனே கூறக் கேட்போம் :

'' இருநிதிக் கிழவனும் பெருமனைக்கிழத்தியும்
அருமணி இழந்த நாகம் போன்றதும்:
இன்உயிர் இழந்த யாக்கை என்ன,
துன்னிய சுற்றம் துயர்க்கடல் வீழ்ந்ததும்:
ஏவ லாளர்! யாங்கணுஞ் சென்று,
கோவலன் தேடிக் கொணர்க' எனப்
பெயர்ந்ததும்:
பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும்,
அரசே தஞ்சம்' என்று அருங்கான்
அடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போல
பெரும்பெயர் மூதூர் பெரும் பேது
உற்றதும்''

மேலும் சொல்லத் தொடங்கிய கோசிகாமணி, கோவலனைப் பிரிந்தபின் மாதவியின் நிலையை மனமுருகிக் கூறுகிறான். அது வருமாறு :

'' வசந்த மாலைவாய் மாதவி கேட்டுப்
பசந்த மேனியள், படர்நோய் உற்று,
நெடுநிலை மாடத்து இடைநிலத்து
ஆங்கு,ஓர்
படை அமை சேக்கைப் பள்ளியுள்
வீழ்ந்ததும்;
வீழ் துயர் உற்றோள் விழுமம் கேட்டு,
தாழ் துயர் எய்தித் தான்சென்று
இருந்ததும்;
இருந்துயர் உற்றோள், ' இணைஅடி
தொழுதேன் ;
வருந்துயர் நீக்கு' என, மலர்க்
கையின் எழுதி,
கண்மணி அனையாற்குக் காட்டுக' என்றே.
மண் உடை முடங்கல் மாதவி ஈத்ததும்;
ஈத்த ஓலை கொண்டு, இடைநெறித் திரிந்து
தீத்திறம் புரிந்தோன் சென்ற தேயமும்
வழி மருங்கு இருந்து மாசுஅற
உரைத்து — ஆங்கு,
அறிவு உடை உள்ளத்து ஆர்
அனார் ஆட்டி,
போது அவிழ் புரிகுழல் பூங்கொடி நங்கை
மாதவி ஓலை மலர்க்கையின் நீட்ட''

''வசந்தமாலையின் மூலம் மாதவி கொடுத்தனுப்பிய கடிதத்தை வாங்க மறுத்த கோவலன், அவளிடம் மாதவி பற்றிக் கூறியதைக் கேட்டதும் மாதவியின் மேனியில் பசலை படர்ந்தது. ஏக்கம் என்னும் நோய்க்கு இரையானாள். தான் வாழ்ந்த எழுநிலை மாடத்து இடைநிலை மாடத்திலே இருந்த பள்ளியறைக் கட்டிலிலே படுத்த படுக்கையாகிவிட்டாள். அவளது நிலையைக் கேட்டு, வருத்தமுற்று, ஒரு நாள் அவளைக் காணச் சென்றேன். அப்போது அவள், 'உம் இருவடிகளைத் தொழுகிறேன். எனக்கு வந்துற்ற துன்பத்தை நீக்கியருள்வீர்' என்று வேண்டினாள். தன்னுடைய மலர்க் கரத்தால் ஓர் ஓலையினை எழுதி, அதன் மீது தன் கூந்தலை ஒற்றி முத்திரையிட்டு, அதனை 'என் கண்மணி அனையாற்கு இதனைக் காட்டுக' என்று கூறி என்னிடம் தந்தாள். அதனைப் பெற்றுக் கொண்டு பலப் பல நாடுகளைச் சுற்றியலைந்து, இறுதியில் இங்கு உம்மைக் கண்டேன்.''

இப்படிக் கூறிய கோசிகாமணி, மாதவி தந்த ஓலையினைக் கோவலனிடம் கொடுத்தான்.

(தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு

பாம்பே டையிங் ஸ்டோர் ஏதேனும் ஒன்றில் நுழைந்து நன்ருகப் புரிந்துகொள ளுங்கள்! எங்கள் கவர்ச்சி யூட்டும் துணிவகை களைப் பாருங்கள் இவற்றின் வண்ணங் களும் டிசைன்களும் உள்ளத்திற்குப் 'படபட' வென்று துடிப்பூட்டும். உங் களுக்கு மட்டு மல்ல. உங்கள் 'அவருக்கும்' தான்.

# ஸெக்ஸ் அப்பீல் பற்றி எவ்வளவோ தெரிந்துகொள்ள விரும்புகிறீர்கள்*...

* ஆனல் வெளிப்படை யாகக் கேட்க பயம்

# பாம்பே டையிங்



BD-9764